# ஆசிரியர் குழு



## உள்ளுறை

உ
சிவமயம்
திருச்செந்திலாண்டவன் துணை




மலர் 11 | சார்வரி-ௗ ஐப்பசி-மீ 1 ம்-உ (17-10-60) | இதழ் 10

# சிதம்பரச் செய்யுட் கோவை

தருமையாதீனம் முதுபெரும்புலவர்,
திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்

(கட்டுரை 39)

தில்லைக்குப் பல திருப்பெயர்கள் உள்ளன. அவற்றுள் பெரும்பற்றப்புலியூர் என்பதும் ஒன்று. வியாக்கிரபாத முனிவர் வழிபட்டது. அப்பெயர்க்குக் காரணம், புலிக்கால் முனிவர்க்கு மலர்க்கால் ஆட்டத்தரசன் திருவருள் புரிந்த வரலாறு கோயிற் புராணம் முதலியவற்றால் அறிந்த உண்மை.

அப் புலியூர்ப் பொன்னம்பலத்தில், கழல்கள் ஒலிக்கப் பரமாநந்தத் தாண்டவத்தை அப்புலிக்கால் முனிவரும் பாம்புக் கால் முனிவரும் கண்டு பேரின்பம் எய்தக் காட்டும் நடராசப் பிரான் அழல் வண்ணமும் ஐந்து திருமுகங்களும் எட்டுத் திருத்தோள்களும் மூன்று திருவிழிகளும் கரிய திருக்கழுத்தும் உடைய ஒருவன் என்பது சைவசிலர் நன்கறிந்ததே. அதனை

ஆசிரியர்,

'புலியூர் மன்றின் ஒலிகழல் மிழற்றப்
பரம நாடகம் இருவரைக் காட்டும்
எரிநிறத் தைம்முகத் தெண்டோண் முக்கட்
கருமிடற் றொருவ'

என்று அண்மையில் நின்று அழைத்ததால் அறிவித்தருளினர்.

அழைத்தது எதனை விண்ணப்பிக்க? அதனை எளிதிற் கூறிவிடலாமோ? எல்லா வுயிர்கட்கும் தாய்மார் யார் யார்? இறைவன் திருமேனியிற் பாதியைக் கொண்ட பார்வதியம்மையும் சடைமேற் குடிகொண்ட கங்கை நங்கையும் தாய்மார் அல்லரோ? தாயார் உயிர் வருந்தப்பிள்ளை பார்த்திருக்குமோ?

'வெண்ணிலவு கொழித்தெறிக்குஞ் செஞ்சடைமோ வியர்வீதி
விடங்கர் ஆரூர்க்
கண்ணுதல்போற் புயவரைசேர் தனவரைகள் இரண்டவற்றுள்
கனக மேரு
அண்ணல்புய வரைக்குடைந்து குழைந்துதலை வணங்கிடும்நம்
அன்னை பாத
வண்ணமுலைத் தடவரைஅவ் வரைகுழையப் பொருவதல்லால்
வணங்கி டாதே'

(திருவாரூர் நான்மணிமாலை. 40)

என்று தாயார் தனவரை மகிமையைத் தனயனர் கூறியதையும் தந்தையார் புயவரைக் குழைவையும், அப்புயவரைக்குக் கனக மேரு ஆகிய தனவரையின் தலைவணக்கத்தையும் அழகுறவும் 'நம் அன்னைபாத வண்ணமுலைத்தடவரை' என்றது உலகியலைக் கடந்தும் கூறிய பிள்ளையார் அல்லரோ நம் குமரகுருபரர்? அவர் கங்கையாகிய தாயார்க்கு வருத்தம் உறக்காணப் பொறுப்பாரோ? உலகிற் காதல் கொண்டவள் மதியால் மதி மயங்குதலும் மாலையால் மாலை நீங்குதலும் உலகியல். சிவ பிரானது செஞ்சடையில் நிலா மதியும் உண்டு. கொன்றை மாலையும் உண்டு. அதனை ஆசிரியர்,

'மாயிரு விசும்பின் தூநிலாப் பரப்பிப்
பாயிருள் சீக்கும் பனிமதிக் கண்ணியும்
மின்செய் கொன்மு வெள்ளிவீழ் வீழ்ப்பப்

பொன்செய் மலர்ப்பூங் கொன்றையும்
... ... நின் செஞ்சடைப் பொலிதலின்'

என்ற பகுதியால் வெளியிட்டருளினுர்.

நிலா மதியாற் காதற்கலாம் உண்டாகும். சீதக் கொன் றையாற் காதற் றுன்பத்தைக் கொன்றையங் கடியலாகும். செஞ்சடையிற்பொலியுங் கலைமதிக் கண்ணியால் கங்கையன்னை யின் காதல் நோய் பெருகிற்று. அவ்வளவில் சிவபிரான் அமைந்திருப்பானேல், அவள் உயிர் போயே தீரும். அந் நோய்க்கு மாற்றுன நல்லதொரு மருந்தாக அச்சடைமேலே பொன்செய் மலர்ப் பூங்கொன்றையும் அணிந்திருப்பதால், வருந்தும் தாயின் உயிர் அவள் உடலில் என்றும் பொருந்தும் நிலைமை உற்றது. இன்றேல் அவள் பொன்றே போயிருப் பாளாம். திங்கட் பிறையை மட்டும் நங்கள் பெருமான் சூடி யிருப்பானே ஆயின், தாயின் உயிர் நோயின் வீயும். வீயின் பிள்ளை பொறுக்குமோ? அவளும் வாழாள் அதுவும் பொருது. அம்மையப்பர் எவ்வுயிர்க்கும் அம்மையப்பர்தாமே!

'அம்மையப்பரே உலகுக்கு அம்மையப்பர்.' 'அம்மை யப்பர் அப்பரிசேவந்தளிப்பர்' என்ற திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுர்க்கு அன்றி மற்றெவர்க்கு அவ்வுண்மை தெரியும்! குமரகுருபர முனிவரர், அதனை

'நோயும் மருந்தும் ஒருவழிக் கிடைத்தென
ஆருயிர் தரித்தனள் அன்றே அதாஅன்று
தெள்ளமு தன்னவர் உள்ளுயிர் குடிக்கும்இத்
திங்கள் ஒன்றே திருமுடிக்கு அணியின்
கங்கை யாளும் உயிர்வா ழாளே'

எனத்தெளி வித்தருளினுர்.

இதற்'கிடைத்தென' என்ற சொல் காரணப் பொருட்டாய வினையெச்சம். சேனுவரையர், 'என என்பது கடதறவூர்ந்து இறந்தகாலம் பற்றி முடிக்குஞ் சொல்லான் உணர்த்தப்படுந் தொழிற்குத் தன் முதனிலைத் தொழில் காரணம் என்பது படவரும்' என்று (தொல்காப்பியச் சொல். சூ. 228. உரையில்)

(தொடர்ச்சி 597-ம் பக்கம் பார்க்க)

# SAIVISM IN SOUTH INDIA

By Dr. V. A. Devasenapathi Avergal

"South India needed a Personal God, an assurance of immortality and a call to prayer. These it found in Manikkavacagar's compositions" says Dr. G. U. Pope in the Preface to his translation of the Tiruvacagam. Scholars are not agreed about the date of Manikkavacagar, some favouring the fourth century A. D. and others favouring the ninth century A. D. Even if the earlier date is accepted, it is possible to give references to still earlier literature in Tamil where we find a lofty theism. In the Paripadal, a Sangam work, we have the following prayer:

"We pray
Not for wealth and gold and enjoyment
But for grace, love and righteousness."

In the same work we find the sentiment that the fruit of contemplative worship must be the deepening and increase of such worship.

In fact, in seeking to understand Southern Saivism or Saiva Siddhanta, we have to take into account Sangam literature of the early centuries of the Christian era in Tamil also in addition to the later Tamil works and the Vedas and Saivagamas. It is usual to classify the later Tamil works on Saiva Siddhanta into two broad groups, devotional and doctrinal. The songs of the Saivite saints portraying their religious experiences have been collected and classified into twelve books called the Panniru Tirumurai. Special mention must be made of at least some of these. The

from "Religion and Society" Reproduced with the kind permission of the author.

first seven are called Tevaram. They contain the songs of the three saints–Sambandhar, Appar and Sundaramurti. The eighth work is called Tiruvacagam which is a composition by Manikkavacagar. The tenth work is called the Tirumandiram. Though this is included in the group of devotional works, it can very well belong to the group of doctrinal works. The twelfth work popularly known as the Periya Puranam is a biography of Saivite saints. Among the doctrinal works known under their collective name of Meykanda Sastras or the Fourteen Siddhanta Sastras, those best known are Meykandar's Sivajnana Bodham, Arulnandi's Sivajnana Siddhiyar, and Umapati Sivam's Sivaprakasam and Tiruarulpayan. Though the first systematic formulation of the Siddhanta is contained in the Sivajnana Bodham which is a work of the thirteenth century A. D., two other works in this group, the Tiruvundiyar and the Tirukkalirruppadiyar belong to an earlier period. Saivism is a very ancient religion antedating its systematic formulation by Several centuries. Southern Saivism bears the distinctive stamp of Tamil culture.

Saiva Siddhanta speaks of three verities, Pati (God), Pasu (the soul) and Pasa (bonds). The doctrinal works seek to establish the existence of these by arguments and by critical consideration of the views of other systems. Though the siddhantin has faith in logic, the truths he seeks to establish arise in and are confirmed by religious experience. Saivite religious experience is a Saga of God's grace. God is beyond the scriptures, and the ken of the human mind; beyond the reach of speech and reason. Is He unknown and unknowable then? The Siddhantin replies that with His Grace, all these, scriptures, etc., can help us to know Him. The existence of God, of souls

and of the bonds which cloud the intelligence and cripple the activities of the souls—the existence of these is proved on the pulse of religious experience which arises by God's grace. Arguments only seek to clarify and confirm such experience for oneself and for others. The story of Kannappar, an illiterate Saivite Saint, is deservedly popular and it has evoked the admiration and respect of a number of saints and seers down the centuries.

How does the Siddhantin argue for the existence of God? He proceeds thus: The world in which we live consists of the three parts classifiable as he, she and it (masculine, feminine and neuter). It is subject to the three states of creation, maintenance and destruction. Hence its emergence after its destruction must be from the Destroyer into Whom it was taken up. It is from Siva the Supreme, therefore, that the world can emerge. To the question why should the world be periodically destroyed, the Siddhantin replies that it is to give rest to the Souls who have to go through repeated births and deaths in order to get rid of the connate impurity (anava) which is beginninglessly associated with them, like verdigris in copper. The existence of such an impurity (anava) is inferred from the fact that the intelligence of souls is clouded by something, which is a positive factor.

Another argument for the existence of God is based on the requirements of morality. The souls engage in activity and therefore have to experience the consequences thereof. These consequences cannot, being inert, attach themselves to the respective agents. The agents (souls), though intelligent, are not unclouded intelligences and would, in all probability, try to enjoy

those consequences which are good but which they have not earned, and escape those which are bad which they have earned. Hence there must be a supreme benevolent Intelligence which apportions consequences in accordance with the original deeds. Such an Intelligence is God. He gives the souls bodies and worlds in which they can live and experience the fruits of their deeds. Karma (deeds) and maya (the primal stuff out of which bodies and worlds are fashioned) as limiting the freedom and intelligence of souls are considered to be bonds along with anava. These three constitute pasa. But while anava is the root evil and is wholly an obscuring principle, karma and maya used aright may help the soul to break the bonds. Using these to remove the root evil is like using fuller's earth to remove dirt.

The Siddhantin argues that the soul is not a void, since there is something which exists even in the very act of denial. It is not the sense organs or the internal organs or the vital air. It is not God. Even in the state of release it continues to exist and does not get merged in God. When the scriptures declare that the soul is one, they mean that the Supreme Soul is one. Meykandar makes it very clear that it would be a fault which cannot be forgiven were the soul to forget God Who has revealed Himself to it and made it like unto Himself. If the soul had forgotten Him earlier it was through ignorance and so could be forgiven. But there can be no excuse once that ignorance is removed through grace. Therefore even in the state of release the worship of that Great One Who has made the soul like unto Himself is a source of strength to the soul.

The souls are essentially pure but are beginninglessly obscured by anava (literally anava is that which makes the pervasive soul atomic). How the souls came to lose their purity is not known. All that the Siddhantin says is that no beginning can be traced for this obscuration. Hence it is said to be beginningless (anadhi). Though the Siddhantin does not know how it began, he is confident that the obscuration will come to an end. He is confident that all souls, without exception, will be saved. In fact, one of the Verses in the Tiruarulpayan says that the released souls are full of compassion to rescue the souls still in bondage. The saints invite those in bondage who hanker after fleeting worldly pleasures to taste the eternal joys of union with God. They record their religious experiences in songs, to proclaim God's grace for the benefit of others.

The strength of a chain depends on its weakest link; so also the strength of the bonds which bind the souls. The strength of this threefold cord (anava, maya and karma) will depend on its weak cords. We can weaken the hold of maya and karma and thus weaken the hold of anava. In fact God has given maya to serve as a lamp when we are enveloped in the darkness of anava. In other words, through the products of maya, viz., the world and the physical body, the soul can endeavour to work out its salvation. But souls usually forget that body and wordly objects are given to work out the consequences of karma and acquire eligibility for the removai of anava—and they forge fresh bonds of karma. The Siddhantin says that only through human birth salvation can be attained. Even the celestials have to be reborn as humans, to worship God and attain release. If

human birth is occasionally spoken of in disparagement, It is because its excellence in terms of the possibility of salvation is forgotten and it is misused to increase the bondage.

As for karma, we find a similar possibility. So long as a soul acts with a sense of agency, it is bound by the consequences of its deeds. when it surrenders its will to God and acts as His instrument, karma ceases to bind it. When with this attitude, the soul cultivates indifference, not to deeds but to their consequences, it becomes eligible for God's grace. God himself appears as Guru, performs a purificatory ceremony (diksa) weans the soul from the influence of pasa, ond reveals the soul's kinship with Himself.

To understand Saivism, we have to read the devotional works and the biographies of saints. In giving a general description of the saints, the **Periya Puranam** says:

Theirs was a (spiritual) wealth which was above the vicissitudes of fortune.

They looked upon a piece of gold and potsherd as alike (matter).

Worshipping on account of the love that welled forth in them.

They were of a resoluteness which did not desire even release.

They worshipped God because they could not help loving and worshipping Him. Hence the question of the motive for worship, whether it is the selfish one of desiring one's own salvation does not arise. Here is what Manikkavacagar says:

> I ask not bliss of Indra, Mal or Ayan; though
> my house and home

Be ruin'd, friendship form I none save with
Thine own; though hell's abyss
I enter, I unmurmuring go, if grace divine
appoint my lot;
O King! no other God save thee I ponder, our
Transcendent Good!
(G. U. Pope's Translation of the Tiruvacagam
Hymn V. The Sacred Canto verse 21.)

We find saint Sambandhar singing:

Even if I falter or fainting sink
Even if disease continues to afflict me
I shall worship Thy Feet.

Here is what a gentle, woman saint says:

Even if He does not remove my troubles,
even if He does not take pity on me
Even if He does not indicate the path I am to
My love for Him will not cease [follow
(For) I have given my heart to Him.

The God Whom these saints worship is no philosophical abstraction or canclusion of a syllogism. Saint Sundarar says that he seeks to draw near Him because he has heard of His grace granted, to saints of old–Sambandhar, Appar and others. In Saivite religious literature we come across references to Siva's grace, granted to members of the sub-human species also. Far from being indifferent to suffering. Siva is concerned to relieve suffering even more than a mother could be in the case of her young one. He is the mother of everything that lives. How can He be indifferent? Siva's drinking poison to prevent destruction of the Universe is a classical instance of His love far all beings. The blue throat of Siva is a perpetual reminder of His love.

Siva's activities—creation, maintenance of the world, ect., are all actuated by His grace. He wants

to save all the souls. The time span may be prodigiously long—apparently unending cycles of creation, etc. But through it all runs one purpose: His purpose—to save the souls and restore them to their divine heritage.

How is this grace obtained? Is it by the soul's effort? No doubt the soul has to engage in moral and religious activity. But the Siddhantin says that the very impulse for these arises from God's grace. Yes, even to worship God, His Grace is necessary. Two ways of the operation of Grace are spoken of. They are compared to the way of the monkey and the way of the cat. The young one of the monkey has to cling to its mother for safety. It has thus to co-operate with its mother. But the kitten depends entirely on its mother for its safety and is therefore carried about by its mother. Saint Pattinattar plaintively sings that he is not like the young monkey and that therefore God should treat him as the cat does its kitten.

The saints make it very clear that they do not deserve God's Grace and yet, out of His boundless compassion, He grants them Grace. Manikkavacagar compares himself to a dog; sometimes he says he is more despicable than a dog. In returning time and again to the enjoyment of worldly objects in preference to spiritual joys, the comparison with the dog is meaningful. (The dog returns to the vomit.) But the dog has one virtue—unswerving loyalty to its master. Those who forget their loyalty to their master are more despicable than the dog. Manikka-vacagar is frequently surprised by the miracle of his own salvation. Others, who pine for it and do continuous penance for it are still waiting, while he,

all unworthy, is saved! It appears almost comical to him, as would the appearance of a dog in a palanquin. 'Even me He took as something worth,—like dog in sumptuous litter borne.'

There is one point to which some attention must be given. When the Saints, no matter to which religion they belong, talk of their sinful ways, and their unworthiness, should we take such references as autobiographical? It may be that even the Saints had their unregenerate days in the past and so might have been guilty of lapses. But when alternating with statements of their spiritual happiness we find self-deprecatory remarks, would this explanation hold good? If not, how are such remarks to be understood? Two considerations merit attention. One is,when, for some reason, there is a temporary break in the religious experience, the Saint feels it so much that he starts a critical and self-examination and attributes the break not to the withdrawal of Gad's Grace but to the possibility of some great lapse of his own. The other consideration relates to the sense of utter unworthiness the Saint feels in the presence of God. In the presence of the Holy, it would be presumptuous to think that human righteousness could be of any avail. We may, perhaps, add a third consideration also. The Saint, in his compassion for the unregenerate masses. Identifies himself with them and feels their lapses as his own.

Saivism speaks of God as Love. If this love encompasses all beings, then it is the obvious duty of Saivites, following their Lord and Master, to treat all lives with reverence and love. Vegetarianism is only an external sign of an inner grace, not to hurt any life but to love it. The important thing, of course,

is the inner grace. Vegetarianism, without real love, will be of no avail at all.

Saivism, in calling for the worship of the blue-throated Siva, demands a readiness on the part of its adherents, to take the sufferings of others on themselves and enable the erstwhile sufferers to enjoy good things. A popular song puts the matter thus:

If one does not share other people's sufferings,

If one does not overcome narrow attachments to oneself.

What is the use of chanting the Tevaram?

Saivism in the South has had a long history. If the past is any indication of its inherent worth, its future is assured.

---

(முன் 587 ம் பக்கத் தொடர்ச்சி)

எழுதியிருப்பதை அறிவார் இதனை நன்குணர்வர். 'சோலைபுக் கென வெப்பம் நீங்கிற்று; உண்டெனப் பசிகெட்டது; உரைத் தென உணர்ந்தான்; மருந்து தின்றெனப் பிணிநீங்கிற்று என வரும்; அவ்வாறே 'கிடைத்தென ஆருயிர் தரித்தனள் கங்கை யாள்' எனவந்தது. 'ஒருவழிக் கிடைத்தமை' காரணம், 'உயிர் தரித்தமை' காரியம். காசிக்கலம்பகம். 65 ஆவது பாடலை ஈண்டு நோக்கி மகிழ்க.

இச்செய்யுளில் 'பாயிருள் சீக்கும் பனிமதிக்கண்ணியும்' என்பது இயற்றளை வெள்ளடி. 'பொன் செய்மலர்ப் பூங்கொன் றையும்' என்பது வஞ்சியடி. இவ்விருவேறடியும் இந்நிலைமண்டில ஆசிரியப்பாட்டில் மயங்கின. 'எரிநிறத்தைம் முகத்தெண் டோண் முக்கண்' என்றது கடைக்கூழை முரண். (ஐந்து, எட்டு, மூன்று என்னும் எண்ணுப் பெயர்கள் ஒன்றற்கு ஒன்று முரணு தல் காண்க).

[தொடரும்]

# ஞானப் பொக்கிஷம்

யோகபிஸக், யோகாஸிரியர். ஸ்ரீ. எஸ். ஏ. பி. சிவலிங்கம் அவர்கள்,
*சிவானந்த ஆஸிரமம், இமயமலே, ரிஷிகேஸம்.*

---

கற்கண்டு இனிக்கும், ஆனுல் உடலுக்குத்திங்கே. அதே போன்று ஆரம்பத்தில் காமம் சுகத்தையும், பின் வியாதியையும் தருகின்றது.

இச்சை என்பது புலன்களின் விருத்தியே, பக்தி என்பது புலன்களே சுத்தப்படுத்துகின்றது. கோபம் கொடூரமானசெய்கை, ஆனுல் கோபத்துடன் பேசி அதில் திழைக்கும்படி செய்யாதே.

உண்ணும் உணவை திய காரியத்தில் செலவிடாது நல் லொழுக்க முறையில் பயிலுக.

வியாதி என்பது தனியானதல்ல, உள்ளமும், நம் ஒழுக்கக் கேடும் இருப்பதால் நாம் அதில் திழைத்திருப்பதால், நம்மை ஆட்கொள்கின்றது பயம் எனும் வியாதி.

ஆண்டவன் படைப்பிலே சமம் எனினும் நாம் செய்யும் திவினையால் பிரிக்கப் பட்டிருக்கிருேம்.

கடவுள் தரிசனம் உண்மையாயினும், கருத்துடன் அதில் திழைக்க வேண்டுமென்பதை மறவாதே.

மனத்தின் ஆயாசமே உடலில் அசௌகரியம்.

சாதனே செய்வதால் உடல் உள்ளம் நலமேற்படுவதெனி னும், இடம் பொருள் முதலியவற்றிற்குத் தக்கவாறு செய்க.

சாந்தி என்பது மனத்தின் ஓட்டம் நிற்பதுதான்.

நாம் இரக்கம் காட்டுவதால் பயனற்றதெனினும், நமக்கு மேல் ஒருவன் இருப்பதால் திங்கின்றி நல்லொழுக்கம் கடை பிடிப்பதே உத்தமம்.

மெய் சிலிர்த்து, உள்ளம் உவகையுடன், சந்தோஷமுடன் இருத்தலினுலே எக்கட்டமும் நிவர்த்தியாகி இறைவனேக் காணலாம்.

எப்பிராணிகளிடத்தும், அன்புடன் அக மலர்ச்சியுடன் அனுதினமும், மனத்தைப்பழக்கி ஆனந்தமுடன் இருப்பின் அதுவே முக்திக்கு வழி.

ஆடம்பரமற்ற செய்கையால் மனத்தில் அகங்காரம் ஒழி கின்றது.

இல்லற வாழ்வென்பது, அக்குடும்பமே தெய்வீக ஞான நிலையையடைய வேண்டுவதே முறை.

சாதனையில்லையேல் எக்காரியமும் முன்நின்று முயற்சியுடன் செய்ய இயலாது. பிரம்மச்சரியமின்றி எச்சாதனைசெய்யினும், பசியின்றி சாப்பிடும் உணவுப் போன்றதே.

கடவுள் சிந்தனையுடன் சாதனைசெய்கவும்.

ஞானக்கண் திறந்தால் கடவுள் தரிசனம் கிட்டும்.

சாதனை என்பது உள்ளத்தின் தூசைப் போக்குகின்றோம்.

உள்ளம் சுத்தமடைய ஒருபோதும் சாதனையை மறவாதே.

கபட நாடகம் நஞ்சிலும் கொடிது.

ஊக்கம் உயர்வைக் கொடுக்கும், அறிவு ஞானத்தையுண்டாக்கும், நல்லொழுக்கம் புகழை யுண்டுபண்ணும், ஆசையற்றோன் அனைவரிடமும் அன்பாயிருப்பான்.

கற்றது யாவும் பலருக்குச் சொல்வதற்கல்ல, நம்மை நாமே அறிவால் இறைவனை யடைவதற்கே.

கற்பே மனிதனின் முக்கிய பொருள்.

சதா ஆனந்தத்தில் திழைத்திருப்போன் அமைதியும், இறைவனின் பக்தனுகவும் எண்ணற்ற அறிவுப்பிரகாசியாகவும் இருப்பான்.

அன்பு, பொறுமை, மன்னிப்பு இக்குணங்களே முப்பெரும் யோகம்.

ஆத்ம சக்தியை வீணுக்காதிருந்தால் நாம் பெரும் ஞானியாவோம்.

பூர்ண பிரம்மச்சர்யம் மனிதனின் மாபெரும் விரதம்.

காண்பது யாவும் காணல் நீர், காணுதது இறைவனின் இருப்பிடம்.

பொருமையுடன் தியானித்து, உள்ளக் கோயிலைத் திறந்து நாம் வந்த விளக்கத்தைக் காண்பதுவே மனிதன் அடைய வேண்டிய கோட்பாடு.

காமம் ஓர் கொடு வியாதி; ஆனுல் பெண்கள் கொடு வியாதியில்லை.

மனத்தையடக்கினுல் மாபெரும் யோகியாகலாம். அவ்வாறே எதிலும் விழிப்புடனும் தனியாகவும், மனத்தை சதா இறைவன்பால் செலுத்தலுமாகவே இருக்கவேண்டும்.

மனம் அடிக்கடி மாயா உலகத்தில் சஞ்சரிக்கும், அதனால் விட்டுப்பிடித்து பின் மனத்தை அடக்குவதென்பது பசியில்லாத சமயம் அறுசுவை யுண்டி கிடைப்பதைப் போன்றதே.

வீண் பேச்சு விலை மாதர்க்கொப்பாகும் எனினும் சதா மனத்தை அலையவிட்டுப் பின்பு மௌனம் சாதிப்பது மாபெரும் கேடே.

மாபெரும் வியாதிகள் நமது அறிவை சோதிக்கவும், நாம் பெரும் பயன் எய்தவுமே வருகின்றது. எனினும் நாம் அதை யும் நினையாது பெரும் கேட்டை விளைவிக்கின்றோம்.

முள்ளந்தண்டில்தான் குண்டலினி எழும்புவதாயினும் அதற்காக பல நூல்களைப் படித்து குருவில்லாது சாதனை செய்து சக்தியை எழுப்ப முயற்சிப்பது ரஸம், குழம்பின்றி வெறும் சோறைச் சாப்பிடுவதைப் போன்றதே.

அடிக்கடி மனோ ஓட்டம் அதிகத்தால் உடல்நலம் குன்று தலும், அழகு கெடுதலும் அறிவு மழுங்குதலும், ஒழுக்கமின்மை யும், ஞாபக சக்தி குறைதலுமேற்படுகின்றது.

கற்பது அறிவிற்கே எனினும் நாம் அதை வீணாக பலருக்கு புகட்டக்கூடாது.

எச்சமயத்தும், அறிவால் அறிந்து, புத்தியால் சிந்தித்து, எக்காரியமும் செய்வதே சாலச்சிறந்தது.

ஆத்ம சக்தி அறிதாயினும், நாம், அதை பல ஆண்டுகள் தவ சாதனையால் பெற முயற்சிக்கவேண்டும்.

நம் கடமையை நாமே செய்வதாயினும் முழு முயற்சியுடன் செய்ய வேண்டும், என்பதை ஞாபகத்திலிருத்தவேண்டும்.

மன வடக்கம், அறிவுத்திறன், சிந்தனை இவைகளுடன் செய்யும் எக்காரியமும் நன்மையுடன் முடியும்.

ஆனந்தம் வரினும், துன்பம் வரினும், கஷ்டம் வரினும் இவையாவும் நிலைத்து நிற்பவையல்லவென்றும், என்றும் போல் சம்பாவனையுடன் இருப்பதே ஆன்றோரின் அறிவுத்திறன்.

பல க்ஷேத்திரங்கள் செல்வதால் யாதும் பயனில்லை. ஆனால் மனோநிலை ஒருமைப்பாட்டுடன் எங்கிருந்தும் தியானம் செய்தால் சாதனை கைகூடும்.

---

# உள்ளத்து ளெல்லாம் உளன்

திருமதி. ஜெ. புவனேசுவரி அவர்கள்
சோமாஸ் நிலையம்; வள்ளீஸ்வரன் தோட்டம், சென்னை-28.

பரந்த உலகத்தின்கண் பல்லாயிரம் மக்கள் காணப்படுகின்றனர். தனக்கே உரித்தான உணவு, உடை, உறைவிடம் ஆகிய மூன்றையும் அனுபவித்து வாழுபவரும் உளர். வாழும் காலத்தில் நல்லறம் புரியாது தீமையை நாடி அதனுல் கேடுறுபவரும் உளர். பொருள் சிறிது இருப்பினும் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புவரும் உளர். வானளாவிய செல்வம் பெற்று பிறர்க்கு ஈயாமல் வாழும் கஞ்சர்களும் உளர். பலவித வர்ண எழிலே மலர்ப் பெற்றுத் துலங்குவது போல், பல்வேறு மனம் படைத்த மாந்தர் வாழ்வதும், சாவதும் சாதாரணமாகி விட்டது. அதே தருணம் "குளனணி தாமரைக் கொழுமலர் நாப்பண் ஒரு தனி யோங்கிய திருமலர்" போன்று இருப்பவரும் உளர். அவ்வாறு இருப்பவர் பொறுமை, பண்பு, வாய்மை இவைகளை தன் சொத்தாகக் கொண்டு இவ்வுலகத்தின்கண் எல்லையில்லாப் புகழ் அடைந்து விடுகின்றனர். பொறுமை, பண்பு, வாய்மை இம் மூன்றுமே அவர்களின் செல்வம், வாழ்வு, புகழ். முப்பெரும் குணம் கொண்ட மனிதர் மனிதராயினும் உலகத்தாரால் தெய்வமெனக் கருதப்படுகிறுர்கள்.

பலமுறை சிறையிலே பாடுபட்டு, தம் தாய்த் திருநாட்டிற்கு அல்லும் பகலும் உழைத்து உயர்ந்தார்கள் மகாத்மா காந்தி, திலகர், சிதம்பரனுர்; சொல்லொணுத் துன்பம் நேரினும் பொறுமை, வாய்மை, பண்பு இவற்றைக் கைவிட்டார் அல்லர். இது நம் இந்திய சரித்திர ஏடு கண்கூடாகக் கண்ட காட்சி. மூன்று காலமும் நன்குணர்ந்த கம்பனே தன் காப்பியத் தலைவனிடம் பல நூற்ருண்டுகளுக்கு முன்பே காட்டி விட்டான்.

இராமன் மனிதனேயானாலும் தன் சீரிய குணத்தால் நம்மவரால் தெய்வமாகக் கருதுவதில் வியப்பில்லையே! கம்ப மலரிலே இராமன் தனி மணத்தை நாலா திக்கும் பரப்புகிறான். பொறுமை அவன் மூச்சாக வெளி வருகிறது. வாய்மை அவன் சொல்லாகத் திகழ்கிறது. பண்பு அவன் நன்னடத்தையை மிகைப்படுத்திக் காட்டுகிறது. இவற்றை எல்லாம் அள்ளி அலங்கரித்த கம்பன் அறிவே! அறிவு!

மங்கையாய் பிறந்து, தசரதனை மாலையிட்டு மகிழ்ந்தாள் கைகேயி. இளமை இன்பத்தால் எழில் வண்ணக் கோலங்களை அவனுக்குக் காட்டினாள். தற்காத்து, தன்னையாண்ட தசரதனின் மானத்தைப் பெரும் போரில் காத்து, மாணிக்கத் தீபமாய் வேந்தனுக்கு விளங்கினாள். அன்பு அன்னையாக இராமனுக்கு இருந்தாள். சிறந்தோள் என யாவராலும் போற்றப்படும் நாளில் அவள் புகழ் வஞ்சகத்தால் மங்கியது. கூனியின் தூபமும் அவள் முன்பு பெற்ற இருவரமும் பெண்மையின் பேதைத் தனத்தைக் காட்டி, ஆண்மையின் நேர்மையை மிகைப்படுத்த இராமனை வனம் ஏவ விட்டது.

"தந்தை சொல் மிக்க மந்திரமில்லை" என்ற திருமொழியை அணியாகக் கொண்ட இராமன் காட்டிற்குப் போக வழிச் செய்து விட்டாள் அன்னை கைகேயி. இராமன் வனம் செல்லப் போகிறான் என்பதைக் கேட்டு, அஃறிணைப் பொருள்களும் அழுததாகக் கம்பன் கூறுகின்றான். மனிதன் மட்டும் பிரிவால் வருந்துவதில்லை! உலகத்திலுள்ள அனைத்துயிர் சீவராசிகளுக்கும் அவ்வுணர்வு உண்டு என்பதைக் கம்பர் கவியால் புனைந்து உரைக்கின்றார்.

"ஆவும் அழுதஅதன் கன்றழுத அன்றலர்ந்த
பூவும் அழுதபுனற் புள்அழுத கள்ஒழுகும்
காவும் அழுத களிறழுத கால்வயப்போர்
மாவும் அழுதனஅம் மன்னவனை மானவே!" — கம்பராமாயணம்.

ஆவும், கன்றும், பூவும், களிறும், இராமனுக்காக துன்புறுகிறது என்றால் அது எதனை நோக்குகிறது! உள்ளத்தால் பொய்யாது ஒழுகினமையாலும், சத்தியத்தின் புத்திரன் ஆனதாலுமே

யாகும். பகுத்தறிவற்ற அஃறிணைப் பொருளே தாங்காதபோது பெற்றதாய், அன்புக் கெழுமிய சகோதரர்கள், உற்றதந்தை, ஆசைக்காதலி இவர்கள். தாங்குவார்களா! என்று நாம் யோசிப் பதில் வியப்பில்லை!

இராமனுக்கு நிழல் போன்று விளங்குபவன் இலக்குவன். இராமனே அவன் உயிர், அன்பு எல்லாம். அத்தகையோன் 'செவியிலே' 'இராமன் வனம் போகப் போகிறான்' என்ற சொல் நெருப்பென நுழைந்தது. தாங்கொணு சீற்றம் கொண் டான். எடுத்தான் ஆயுதங்களை! புறப்பட்டான் கைகேயியை ஒழிக்க! கடிவிரைவாகச் சென்ற இலக்குவன் சீற்றம் இராமன் தோற்றத்தைப் பார்த்து சற்று தணிந்து, அடக்க முடியாத பெரு வெள்ளமாகத் திகழ்ந்தது. சீற்றத்தின் விளைவாய் அவன் செந்நாவினின்று சுடுசரங்கள் சரமாரியாகப் பொழிந்தன. கையின் அறிவுத் திறத்தை தூற்றினுன்.

"சிங்கக் குருளைக் கிடுதீஞ்சுவை ஊனைநாயின்
வெங்கட் கடுங்குட்டியை ஊட்ட விரும்பினாளால்
நங்கைக்கு அறிவின்திறம் நன்றிது நன்றிது என்னுக்
கங்கைக்கு இறைவன் கமலக்கைப் புடைத்து நக்கான்"

– கம்பராமாயணம்.

"எண்ணறக் கற்று எழுத்தற வாசித்தாலும் பெண் புத்தி பின் புத்தி" என்பதற்கு ஏற்ப நங்கையாகிய கைகேயியின் அறிவுத் திறத்தை இகழ்கிறுன். இராமனை வீரச் சிங்கத்திற்கும், பரதனையோ நாயினும் இழிந்ததாக வைத்துக் கூறுகிறுன். இது அவன் கோபச் சொற்கள்.

இலக்குவன் சீற்றத்தை இராமன் பொறுமைச் சொற் களால் சரிப்படுத்துகிறுர். கோபத்தின் வேகத்தால் சூடுண்ட அவன் மூளைக்கு இன்னுரை இகழலாம் என்பது தெரியவில்லை. அதனை அவன் நினைவுகூற, இலக்குவா! நின்வாய் நான்மறை ஓதுவது, பெரியோரைப் போற்றுவது. அத்தகைய வாயால் தாயை இகழ்வது சரியன்று. கைகேயி பெற்ற தாயாய் இல்லா விடினும் அன்பின் காரணமாய் உற்ற தாயாய் விளங்க

வில்லையா ? மனித மனம் நிலையற்றது. இன்று ஒன்று நாளை ஒன்று நினைக்கும். அதனை உய்த்து உணர்ந்த நீ இப்படி அடாத வார்த்தைகளைக் கூறலாமா? சற்று யோசி! என்கிருன். இதனைக் கம்பன்,

"ஆய்தந்து அவன்அவ் வுரைகூறலும் ஐயநின்றன்
வாய்தந் தனகூறு நியோமறை தந்தநாவால்
நீ தந்தது அன்றே நெறியோர்கண் நிலாதது ஈன்ற
தாய்தந்தை என்றல் அவர்மேல்சலிக் கின்றதென்னே"

— கம்பராமாயணம்.

தம்மை இகழ்ந்து, பிறர் தம் சொத்தைப் பறித்தாலும் பூமியைப் போல் பொறுமையைக் கொள்ள வேண்டும். நிறை யுடையவனுக இருக்கவேண்டியவன் பொறுமையை போற்றி யொழுக வேண்டும். சிறந்தத் தகுதியுடையவனுகிய நீ அன்னையை வெகுளுவது சரியன்று! நடப்பது! நடக்கத்தான் போகிறது! அப்படி யிருக்கும்போது உன் சினம் பலிக்காது. என் செயல் உன் கோபத்தால் முறிந்து விடும் என்று நினைப் பதும் வெறும் கனவு. நாட்டை யிழந்தாலும் தன் பொறுமையை இராமன் கைவிட்டான் இல்லை. இன்னுச் செய்தார்க்கும் இனி யவைச் செய்யும் இராமன் உலகத்துள்ளோர் உள்ளங்களி லெல்லாம் உளன் என்பதில் ஐயமில்லை. கூற்றுவனைப் போன்ற அன்னையைக்கூட அந்நேரத்தில் இராமன் இகழ பொறுக்க வில்லை அன்றே! சிறந்தோன் என்றுமே தன் சீரியக் கொள்கையை கைவிட்டான்.

குழைக்கின்ற கவரியின்றியும், வெண் கொற்ற குடை யின்றியும் இராமனை விதி வனத்திற்கு அழைத்துச் செல்லு கிறது. தந்தையிட்ட கட்டளையைத் தாயின் வாயிலாக அறிந்து தலைமேற் கொண்டு பூழி வெம்கானம் நண்ணி, புண்ணியத் துறைகள் ஆடப் போய்விட்டான். மனிதன் தீரமாக ஒரு செயலில் இறங்கும்போது சொல்லொணு துன்பம் வந்து மாயைப் போன்று தடுப்பது நாம் அறிந்த உண்மை. அதைத் தகர்த்து முன்னேற்றப் பாதையை நாடுபவனே இலட்சிய புருஷனுக நம்மவரால் போற்றப் படுகிருன். இவ்வாருக,

இராமன் வனம் செல்லாமல் தடுக்க பாசவலைகள் தடுக்கின்றது இராமன் மீதுள்ள அன்பால் பெற்றெடுத்த அன்னை கொழுநனை யும், அவன் வஞ்சகத்தையும் தூற்றுகிறாள். ஆங்கண் இராமன் அன்னைக்கு கற்புப் பெண்ணின் இலக்கணத்தைக்கூறி அன்னை யிடம் விடை பெறுகிறான். இலக்குவனே! விண்ணவர், மண்ண வர், விஞ்சையர் மற்றும் மும்மூர்த்திகளே வந்தாலும் எம் இராமன் மௌலியைக் கொல்ல முடியாது. என் வில் அவர் களைப் பதம் பார்த்து விடும் என்று எட்டாத கோப நிலையில் நிற்கிறான். அவனுக்கு ஊழைவிட மிக்க வலிமை யுள்ளவை வேறு எவை உள்ளன. அதை விலக்கும் பொருட்டு நீ எவ் வழியை நாடினும் அஃது பயனற்றதாகப் போகும் என்று உரைத்து கடமையை உணர்த்துகின்றான். சம்சாரப் பாசவலை யைத் தாண்டி வனம் புகுந்தான். சின்னாள் சென்றது. சீரிய பரதன் வந்தான் ! தொழுதான். தந்தையின் இறப்பைக் கேட்டு துடித்தான் அதை அண்ணலிடம் கூற முடியாது தவித்தான்! பின்னர் ஒருவாறு தன்னை தேற்றிக்கொண்டு கூறி முடித்தான். இராமன் வருத்தம் தாங்கா வசிட்டன் கூறுகிறார், அப்பனே! இறத்தலும், பிறத்தலும் இயற்கை என்பதனை நீ அறியாயோ! அறிந்த நீ ஏன் அவதியுறுகிறாய் ! என்று பலவாறாக சமா தானம் உரைக்கிறார். துக்க விடயங்கள் ஒருவாறாய் முடியும் தருணம் வசிட்டன் இராமனை நாட்டை ஆள உரைக்கின்றார் !

"என்றலால் யான்உன்னை எடுத்து விஞ்சைகள்
ஒன்றலா தனபல உலவிற்று ண்மையால்
அன்றெனது இன்றெனது ஆணை ஐயநீ
நன்றுபோந்து அளிஉனக்குரிய நாடென்றான்"

— கம்பராமாயணம்.

வசிட்டனின், வாய் சொற்கள் இராமனின் இருதயத்தை அம்புபோல் தாக்கியது. வசிட்டனின் ஆராய்ந்த அறிவே இப்படிக் கூறுகின்றதே என்று அவன் மனம் இரக்கம் கொண்டு இரங்குகிறது. கோபத்தால் தூற்ற விழையும் அவன் வாயில் வாய்மை முன் நிற்கிறது. வாய்மை எனப்படுவது யாதெனின் மற்றவர்க்கு ஒரு சிறிதும் தீமை இல்லாத சொற்களைச் சொல்லும் அறமாகும். அருளை விரும்பி அறநெறியில் நின்றவன் தாய் தந்தையரின், கட்டளையை அவர்களுக்குக் கூறி தன் கடமையை

உணர்த்துகிருன். கட்டளையிட்ட தந்தையும் மாண்டான், நாடும் துன்பத்தால் நலிவுறுகிறது. அச்சமயத்தைப் பயன்படுத்தி பிறிதொன்றைக் கூறி நாட்டை இராமன் ஆளலாம். ஆனுல் இராமன் அதனை இறுதிவரையும் விரும்பினுன் இல்லை. எனவே வசிட்டனுக்கு பதில் கூறுகிருன் இராமன்,

"தாய்பணித்து உவந்தன தந்தை செய்கென
ஏயஎப் பொருள்களும் இறைஞ்சி மேற்கொள்ளாத்
தீயஅப் புலையனில் செய்கை தேர்கிலா
நாய்எனத் திரிவது நல்லதல்லதோ" —கம்பராமாயணம்.

பணித்ததை மேற்கொண்டு, அதனை இன்று நான் விடுத்து, வாய்மையை புறக்கணித்து யான் இன்று நின்பால் வருவதிலும், நான் நாயாக திரிவதே மேல்.

மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை. —குறள்.

வாய்மையையே பொய்யா விளக்காகக் கொண்ட இராமன் நாடு பெறுவதால் பெறும் இழிவினை உணர்ந்து, தந்தைசொல்லை தகர்ப்பது அறிவன்று! என்று, உணர்ந்து உரைக்கின்ருன்.

"முன்னுறப் பணித்தவர் மொழியை யான் என
சென்னியில் கொண்டது செய்வென் என்றதன்
பின்னுறப் பணித்தனை பெருமையோ எனக்கு
என்இனிச் செய்வதை உரைசெய் ஈங்கென்ருன்"
—கம்ப ராமாயணம்.

மலைப்போன்றத் துன்பம் நேரினும் அதனைத் தன் மாட்சிமைப் பொருந்திய பொறுமையால் வென்று, தானும் இருந்து பிறரையும் நல்வழிப் படுத்தி வாழ்ந்தான். தகப்பன் கட்டளையிட்ட அன்றிலிருந்து வனவாசம் பூர்த்தியாகும் வரை தன் வாய்மையைக் கைவிடாது இருந்தான். நீதியும் நன்மையும் உணர்ந்து வாழ்ந்த பண் பாளனுகிய இராமன் முக்காலத்தும், உலகத்தார் உள்ளத்தில் எல்லாம் மரகத ஒழியாய் திகழ்கிருன்.

"உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்". —குறள்.

---

திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய

# 1, 2, 3, திருமுறைப் பெருமை



*காரைக்குடி, ஹிந்து மதாபிமான சங்கம். 43-வது ஆண்டுவிழாவில்;*

*தேவகோட்டை. தமிழ் வள்ளல், சிவபாதசேகரர். சைவசித்தாந்தப்புரவலர்*

**திரு. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள்,**

பாடியது.

---

வேதமொ டாகமம் விளம்பும்நற் சைவ
சித்தாந்த மாதிய செந்நெறி யாவும்
போற்று மாறு பொலிபரி பூரண
வத்துவாய், எல்லாம் வல்ல பரமாய்ப்
பொருந்தும் சிவபரம் பொருளினை அன்பர்
உள்ளவா றேதி உணர்வதற் கெளிய
மார்க்கம் தோத்திர பாரா யணமாம்;

அப்படித் தோத்திரம் புரிவதற் கமைவது
தேவா ரத்தொடு திருவா சகமும்
ஆதியாம் பன்னிரண் டருட்டிரு முறைகள்.

அவற்றினில் முதலாய் அவிரும்ஓ ரேழும்
திருமுறை யாகவும் செப்பிடும் பஞ்சப்
பிரமமந் திரமென்றும் பேசப் படுமே.
ஒன்றுடன் இரண்டு மூன்றெனும் திருமுறை
வேத நன்னெறி விளங்கிடச் சைவம்
பூத லத்திடை பொலிவுறச் சண்பை
மாதவ மென்ன வந்தசம் பந்தர்
புனிதவாய் மலர்ந்து புகன்றவை யாகும்
பதிகத் தொகைபதி னாறு யிரமாம்

அவற்றுள்,

பகருமுந் நூற்றெண் பத்து நான்கே
இந்நாள் வழங்க இருப்ப தாகும்
முதற்றிரு முறையில் முயங்கும் பதிகம்

நூற்று முப்பத் தாறென் றமையும்
இலகும்நூற் றிருபத் திரண்டு பதிகம்
இரண்டாந் திருமுறைக் கிசைவ தாகும்
அவிரும்நூற் றிருபத் தாறு பதிகம்
மூன்றுவ தாக மொழிதிரு முறையிற்
பொருந்து மாறு புரிந்தனர் பெரியோர்.

முத்தமி ழிலக்கண முறையும் ஓசையும்
பத்தியி னியல்பும் பரம னருளும்
ஓதுவார் பயனும் உற்றபல் சிறப்பும்
அத்திரு முறைகளில் அமைவதை அன்பர்
கற்றுணர்ந் திடுவது கடமையாம், அன்றே
அத்திரு முறைச்சீர் அறையுமுன் அதைநுவல்
காழிவேந் தன்புகழ் கருதுவோம் சிறிதே

நாவுக்கரசர் நவிலும் சிறப்பு

இணைகொள் ஏழெழு நூறிரு பனுவல்
ஈன்றவ னென்ன இசைக்கவாழ் அப்பர்
"பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்"
"பண்ம லிந்த மொழியார் செந்தமிழ்
உறைப்பப் பாடி யவர்" எனப் புகழ்வார்

ஆரூரார் கூறும் அருமைப் பண்பு

பரமனைப் பரவை பாற்றா தனுப்பும்
ஆரூராகிய நாவலூர் நம்பி
"வம்ப ருவரி வண்டெனத் தொடங்கி
எம்பி ரான்சம் பந்தன்" என்றும்
"நாளும் இன்னிசை யாற்றமிழ் பரப்பும்
ஞானசம் பந்தன்" என்றும் நவின்றார்

சேதிராயர் செப்பும் உயர்வு

"எம்பந்த வல்வினை தீர்த்தெமை யாண்ட
சம்பந்தர்" என்னச் சேதி ராயர்
திருவிசைப் பாவிற் செப்பிப் புகழ்ந்தார்

### சம்பந்தர் தன்சீர் சாற்றும் தன்மை

திருக்கடைக் காப்பு செப்பும் பாடலில்,
"பொன்னி நாடன், புகலியர் வேந்தன்,
காழி மாநகர்க் கவுணியன், பூசுரன்,
நான்மறை கற்றவன், நல்லிசை யாளன்,
புல்லிசை கேளா ஞானசம் பந்தன்,
சந்தமலி பாடல் வல்லவன், நற்றமிழ்
ஞானசம் பந்தன்" என்பது போலத்
தேவா ரத்தினிற் செப்பினர், அன்றியும்

### தனது பாடலின் தன்மை கூறல்

தம்தமிழ்ப் பாடல் "விலையுடை அருந்தமிழ்"
"வாரம் வைத்த பாடல் வழிபாடு"
ஓதும் "இன்னிசையால் உரைத்த பனுவல்"
என்றெலாம் கூறும் இயல்பால் அறியலாம்.

### பாடல் ஓதுவார் பயன்பெறல் கூறல்

பாடல்கள் ஓதுவார் பற்றும்நற் பயனை
"சம்பந் தன்சொல் மடியாது சொல்ல
வல்லார்க கில்லையாம் மறுபிறப்" பென்றும்,
"பண்ணியல் பாடல் வல்லார்கள் இந்தப்
பாரொடு விண்பரி பாலக" ரேயென்றும்,
இன்னமும் பல்வா றிசைப்பார் தாமே.

### நாட்டின் பெருமையும் நன்மக்களியல்பும்

"உரவார் கலையின் கவிதைப் புலவர்க்குக்
கரவார் வண்கைக் கற்றவர் சேரும்
கலிக்காழி" என்றும், "கலையின்மேவு
மனத்தார் இரப்போர்க்குக் கரப்பிலார் பொலியும்
புகலி" "இன்மையாற் சென்றிரந் தோர்க்கு
இல்லையென் னுதீந் துவக்கும் தன்மையர்
ஆக்கூர்" என்றும் அறைதலுற் றனரே.

### இயற்கை அழகினை இயம்பும் முறைமை

"எண்ணார் முத்தம் ஈன்று, மரகதம்
போலக் காய்த்துக், கண்ணார் கமுகு
பவளம் பழுக்கும் கலிக்காழி" என்றும்
"வண்டு பாட மயில் ஆலவும்,
மான்கன் றினங்கள் துள்ளவும்,வரிக்
கெண்டை பாயச் சுனையினில் நீல
மொட்ட லரும்கே தாரம்" என்றும்,

"பாரிசை யும்பண் டிதர்கள்பன் னாளும்
பயின்றோதும் ஓசை கேட்டு வேரி
மலிபொழிற் கிள்ளை வேதத் தின்பொருள்
சொல்லும் மிழலை" என்பது போல
விதவித மாக விளம்பினர் அன்றே.

### ஆண்டவன் தன்மை

"ஈறாய், முதல்ஒன் றாய்,இரு பெண்ஆண்
குணமூன் றாய்மா றாமறை நான்காய்
வருபூ தம்அவை ஐந்தாய் ஆறார்
சுவைஏழ் ஓசை யெட்டெட் டுத்திசை
தானாய் வேறாய் உடனா னிடம்
வீழி மிழலை" "உரைசேரும் எண்பத்து
நான்குநூ றாயிர மாம்யோனி பேதம்
நிறைசே ரப்படைத்(து) அவற்றின் உயிர்க்குயிர்
ஆகியாங் காங்கே நின்றான் கோயில்"
என்று திருமுறை யினிலிசைத் தனரே.

### ஆண்டவனடியவர்க் கருள்செய்யும் பண்பு

"மண்ணினில் நல்ல வண்ணம் வாழலாம்"
"பேயடை யாபிரி வெய்தும் பிள்ளையோ(டு)
உள்ள நினைவா யினவரம் பெறுவார்"
"மண்புகார் வான்பு குவார்,மனம் இளையார்
பசியா லும்கண் புகார்பிணி யறியார்
என்ன ஆணை யிட்(டு)இனி திசைத்து
வழிபடு வார்பயன் வகுத்தோ தினரே.

### ஆணையிட்டுக் கூறும் ஆண்மை

“நனிபள்ளி உள்க வினைகெடு தல்ஆணை
நமதே” “வானிடை வாழ்வார் மண்மிசைப்
பிறவார் மற்றிதற் காணையும் நமதே”
“ஆனசொன் மாலை ஓதுமடி யார்கள்
வானிலர சாள்வர் ஆணைநம” தென்னக்
கூறும் உறுதியைக் குறித்தறிந் தேத்தி
நற்பயன் பெறுதல் நம்மது கடனே.

### சிவனடியவர்தம் சீரிய பண்பு

“மெய்ய ராகிப் பொய்யை நீத்து
வேதனை துறந்து செய்ய ரானார்”
“நறைம லிதரும் அளரொ டும்முகை
நகும லர்புகை மிகுவ ளரொளி
நிறைபு னல்கொடு தனைநி னைவொடும்
நியத மும்வழி படும்அ டியவர்”
என்றபடி யவர்தம் இயல்பிசைத் தாரே.

### சம்பந்தர் வாக்கு சங்கரன்றனதெனல்

இலம்பையங் கோட்டூர் இறைவனைப் பாடும்
திருப்பதி கத்திற் செப்புதன் பாட்டெலாம்
ஈசன் றனதே யென்னும் உண்மையை
“எனதுரை தனதுரை யாக,நீ றணிந்து
ஏறுகந் தேறிய நிமலன்” என்ன
ஒவ்வொரு பாட்டிலும் உரைத்தன ரென்றால்
சம்பந்தர் சாற்றும் தமிழ்ப்பாட் டனைத்தும்
சங்கரன் பாட்டெனல் சத்திய மாகும்
ஆதலால் திருமுறை மூன்றையும் அறைவோர்
வேதா கமமுணர் மேலவர்க் கொப்பே.

### சீகாழிப் பிரான் திருமுறைப் பெருமை

வைகையில் ஏடு மறுத்தெதிர் சென்றும்
வெந்தண லதனில் வேகா திருந்தும்
மயிலையில் எலும்பை மகளுரு வாக்கியும்

ஆண்பனை பெண்பனை யாகப் புரிந்தும்
திருமரு கலின்பாற் றீய விடத்தால்
மாய்ந்தான் றனக்கு மன்னுயி ரளித்தும்
சமணரைக் கழுவிற் சாரச் செய்தும்
கூன்பாண் டியனுடற் கூனை நிமிர்த்தும்
வெப்புநோய் மாறன் விலக ஆற்றியும்
திருநீற் றின்புகழ் தெரித்தது ஞான
சம்பந்தப் பிரான் தமிழ்த்திரு முறையே.

ஆண்டவனிடத்தி லமைந்த பேரன்பு
"கனவிலும் நனவிலும் நம்பா உன்னை
மனவிலும் வழிபடல் மறவேன்" என்றும்
"என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே
வலஞ்சுழி வாணனை வழிபடு மதனால்"
"நன்னெஞ் சேயுனை யிரந்தேன்நம் பெருமான்
திருவடி யேஉன்னல் செய்திரு மனமே"
"தீபம், மாலை, தூபமும் செறிந்த
கைய ராகிநம் தேவ தேவன்
மன்னும்ஊர் திரிந்து காழி சேர்மினே"
என்றுதம் பாடலில் எடுத்துக் கூறி
நம்மை யெல்லாம் நல்வழிப் படுத்தி
உய்வகை பலவாய் உரைத்தனர், அதனால்
செய்வகை அறியாது தீவினை வசமாய்
நைவுறும் நாமெலாம் நாளும் அன்புடன்
திருமுறைப் பாடலைத் தினமும் பூசித்துப்
பாரா யணம்செய்து பயனடை வோமே.

திருவருள் துணை,

---

# மூல இலக்கியம்*

[ முருகவேள் ]

**முன்னுரை: இலக்கியமும் நாடும்**

ஒரு நாட்டின் நாகரிகச் சிறப்பினை விளக்குவனவற்றுள், அந்நாட்டிற்குரிய இலக்கியங்கள் தலைசிறந்தனவாகும். நாட்டு மக்களின் வாழ்க்கை நல்ல நிலையிற் செழித்தோங்கி யிருந்தால், அதுபோது தோன்றும் இலக்கியங்களும் செழித்துச் சிறந்தோங்கி விளங்கும். நாட்டு மக்களின் வாழ்க்கை நலிவுற்றுச் சிதைந்து சீரழிந்து போயிருந்தால், அப்போது தோன்றும் இலக்கியங்களும் தரங்குன்றித் தாழ்ந்திழிந்து நிற்கும். இலக்கியங்கள் வளர்ந்தால் நாடும் வளரும்! இலக்கியங்கள் இழிநிலை எய்தினுல் நாடும் இழிநிலை எய்தும்! நாட்டு மக்களின் தாழ்வும் தளர்ச்சியும் போக்கி, நலம்பல பெருக்கிச் செழிப்பும் சிறப்புமுறச் செய்ய வல்லவை, சீரிய இலக்கியங்களே யாகும்.

**இலக்கியம் பற்றிய விளக்கம்**

தேயம் இடையிட்டவற்றையும் காலம் இடையிட்டவற்றையும் நம்மனோர்க்குக் காட்டி யுணர்த்துதல் பற்றி, இலக்கியங்களைக் "கண்கள்" என்று திருவள்ளுவர் புகழ்ந்து போற்றுகின்ருர். இலக்கியங்களை 'எக்காலத்துக்கும் உரிய நூல்கள்' என்னும் பொருளில் "இலங்கு நூல்" எனத் திருவள்ளுவர் குறிப்பிடுகின்ருர். நாம் இந்நாளில் 'Classics' என்பனவற்றையே 'இலங்கு நூல்' எனத் திருவள்ளுவர் குறித்தனர்

*தூத்துக்குடிச் சைவ சித்தாந்த சபையின் 76-ஆம் ஆண்டு நிறைவு விழாவில் பேசியதனைத் தழுவியது (21—5—60.)

"சித்தாந்தம்" மலர் 33 இதழ் 8-ல் வெளிவந்துள்ள இக்கட்டுரை தொ. ஆசிரியர் அனுமதியுடன் பிரசுரிக்கப்பெற்றது.

போலும்! இலக்கியங்களைக் கல்லாதவர்களின் இழிவினை "விலங்கொடு மக்கள் அனையர் இலங்கு நூல் கற்றாரோ டேனையவர்" என அவர் இகழ்ந்துரைத்தல் காணலாம். இலக்கியங்களின் சுவை பெருகிப் பயன்விளைக்கும் பண்பு இத்தகைய தென்பதனை "நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு" என்பதனால் அவர் விளக்கியருளி யிருத்தல் அறிந்தின்புறற்பாலது.

> "இவ்வுருவு நெஞ்சென்னும் கிழியின்மேல் இருந்து இலக்கித்து
> அவ்வுருவு நினைப்பென்னும் துகிலிகையால் வருத்தித்துக்
> கவ்வியதன் நோக்கினாற் கண்விடுத்துக் காதல்நீர்
> செவ்விதில் தெளித்தானுக் காமப்பூச் சிதறினான்"

எனவரும் சீவகசிந்தாமணிச் செய்யுளில் 'இலக்கித்து' என்னும் சொல் 'எழுதி' என்னும் பொருளில் ஆளப்பெற்றிருத்தலால், 'இலக்கியம்' என்னும் சொற்பொருள் இனிது தெளியப்படும். இலக்கியங்கள் எல்லாரையும் எல்லாக் காலத்திலும் இன்புறுத்தும் தகைமை வாய்ந்தன. அவை 'காலத்தால் வாடி வதங்குவதில்லை'; 'அவற்றின் அளவிலா நலங்கள் பலகால் பயிலுதலால் சுவை குன்றித் தெவிட்டுவதில்லை'. ("Age cannot wither them, nor custom stale their infinite variety.")

**இருண்ட கால நிலைகள்**

தமிழகத்தின் பொற்காலம் எனத் தகுந்த சங்ககாலத்திற்குப் பிறகு, தமிழக வரலாற்றில் ஓர் 'இருண்ட காலம்' நிலவியது. அவ்விருண்ட காலத்தில் நாட்டின் நிலைமையும் பல்லாற்றான் நலிவுற்றுக் கிடந்ததனால், நல்ல இலக்கியம் எதுவும் அதுபோது தோன்றா தொழிந்தது. அவ் விருண்ட காலத்தில் சேர சோழ பாண்டியர்களாகிய தமிழ் மூவேந்தர்களின் ஆட்சி வலிகுன்றிச் சீரழிந்திருந்தது. வேற்றரசர்கள் தமிழகத்திற் புகுந்து ஆட்சி செலுத்தத் தலைப்பட்டனர். வேற்று நாட்டவரின் கொள்கைகளும் பழக்க வழக்க ஒழுக்கங்களும் தமிழ்நாட்டில் தடையின்றிப் புகுந்து பரவலாயின. வேற்று மொழிகள் பல தமிழ்நாட்டிற் புதிது புகுந்து வழங்கத்

தொடங்கி, அரசியல் மொழிகளாகவும் நிலைபெற முற்பட்டன. பழந்தமிழ்ச் சங்கமும், அச்சங்கத் தமிழ்நூல்களும் அழிந்து மறையத் தொடங்கின. வேற்று நாட்டவர் வேற்றுக் கொள் கையாளர்களுக்குத் தமிழகத்தில் ஏற்பட்ட ஆட்சியுரிமை வலி மையால், தமிழ்நாடு மிகவும் தளர்வுற்றுத் தமிழ் மக்களும் நிலை குலையலாயினர். சங்ககால வாழ்க்கை வரன் முறைகளும் பழக்க வழக்கப் பண்பாடுகளும் போற்றுவாரின்றி அழியத் தலைப்பட்டன. இசைத்தமிழும் நாடகத்தமிழும் பிறபல கலை களும் அழியவிடப் பெற்றன. வேற்றவர் ஆட்சியும் தலைமை யும் தமிழ் நாட்டிற் புகுந்ததனுல், தமிழ் மக்கள் அடிமை மனப் பான்மை எய்திப் பழம்பெருஞ் சிறப்புக்களை இழந்து, மொழிப் பற்றும் கலையுணர்வும் குன்றி, அறிவு நலம் சாம்பி இழிதக வுற்றுக் கிடந்தனர். பழம் பெருந் தமிழ்ச் சமயங்களாகிய சிவ நெறியும் திருமால் நெறியும் பொலிவிழந்து மங்கிக் கிடப்ப, ஒன்றுக்கொன்று முரண்பாடுடையனவும், ஒன்றேடொன்று பெரும்பகைகொண்டு, ஒன்றையொன்று அழித்தொழித்தற்கு அற்றம் நோக்கியிருந்தனவுமாகிய பல புதுப்புதுக் கொள்கை கள், தமிழகத்திற் புகுந்து நுழைந்து வேரூன்றிப் பரவிச் செல் வாக்குப் பெற முயன்றன.

**சமய ஆசிரியர் செயல்கள்**

இவ்விருண்ட காலத்திற்குப் பின்னர்க் கி. பி. 6–7-ஆம் நூற்ருண்டுகளில் பல்லவப் பேரரசு தலையெடுத்து வளர முற் பட்டது. அப் பல்லவப் பேரரசின் காலத்தில் தான், நமது சைவ சமய ஆசிரியர்களாகிய திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் தோன்றி வாழ்ந்து விளங்கினுர்கள். அவ்விரு பெருமக்களும் நமக்குக் காலத்தினுற் செய்த நன்றியின் அருமை பெருமைகளை, அவர்கள் காலத்துத் தென்னிந்தியாவின் அரசியல் பொருளியல் சமய சமூகவியல் வரலாறுகளை யெல் லாம் நன்கினிது ஆராய்ந்தறியினன்றி, ஒரு சிறிதும் உணர்தல் இயலாது. புதுமை புரட்சி சீர்திருத்தம் மறுமலர்ச்சி என்பன போலும் பல சொற்கள் சொற்ருெடர்களை, இன்று நாம் பலகாலும் பலரும் முழங்கக் கேட்கின்ருேம். இவை தம்மையெல்லாம் இற்றைக் குப் பல நூற்ருண்டுகட்கு முன்னரே நமது சமய ஆசிரியர்கள்

நிகழ்த்திக் காட்டியிருப்பதனை நம்மிற் பலர் அறிவதில்லை. திருநாவுக்கரசர் திருஞானசம்பந்தர் முதலிய நமது சமய ஆசிரியர்கள் தமது காலத்தில் தமிழ் நாட்டில் பல பெரும் புரட்சிகளைச் செய்தனர்; புதுமைகளை வகுத்தனர்; சீர்திருத்தங் களை நிகழ்த்தினர்; மறுமலர்ச்சிகளை விளைத்தனர்!

"பாடிய செந்தமி ழாற்பழங் காசு பரிசில்பெற்ற
நீடிய சீர்த்திரு ஞானசம் பந்தன் நிறைபுகழான்
நேடிய பூந்திருநாவுக் கரசோ டெழில்மிழலைக்
கூடிய கூட்டத்தி னுல்உள தாய்த்திக் குவலயமே"

**இலக்கியத்திற் புதுமையும் புரட்சியும்**

நம் சமய ஆசிரியர்கள் பலவகைப் புதுமை புரட்சி சீர்திருத் தம் மறுமலர்ச்சிகளை நிகழ்த்தியமைக்கு உறுபெருஞ் சான்று களாக அவர்தம் பாடல்களே அமைந்துள்ளன. இலக்கியங் களின் அமைப்பிலும் போக்கிலும் கருத்திலும் புரட்சி நிகழ்ந் தால், அவை நாட்டின் நிலையிலும் பெரியதொரு புரட்சியை விளைவிக்கும். நாட்டில் ஏதேனும் புரட்சி நிகழுமாயின், அதன் அறிகுறிகளும் விளைவுகளும் இலக்கியங்களிற் பதிந்து இடம் பெறும். இவ்வுண்மைக்கு நமது சைவத் திருமுறை இலக்கியங் கள் சான்று பகர்ந்து நிற்கும் தன்மையனவாதல் காணலாம். சங்ககால இலக்கியங்களுக்கும், அவற்றிற்குப் பின்னர் அவற் றின் அடிப்படையில் எழுந்த திருமுறை இலக்கியங்களுக்கும் இடையே, அமைப்பிலும் போக்கிலும் கருத்திலும் சிற்சில வேறு பாடுகள் உண்டு. பிற துறைகளில் மட்டுமன்றி, மொழித்துறை இலக்கியத்துறை கவிதைத் துறை முதலியவற்றிலும் கூட, ஒரு புது நெறியையும் மறுமலர்ச்சியையும் புரட்சியையும் நமது சமய ஆசிரியர்கள் நிகழ்த்தியுள்ள திறனைச் சங்ககாலத்திற்குப் பின்னர் எழுந்த தமிழ் இலக்கியங்களின் போக்கினாலும், அமைப் பினாலும் நம்மனோர் நன்கினிது அறியலாம்.

இருண்ட காலத்திற் செயலிழந்து; இழிநிலையடைந்து உணர்ச்சியற்றுக் கிடந்த தமிழ் மக்களை "நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பி"த் திருஞானசம்பந்தர் தட்டி எழுப்பினர். தமிழ் - தமிழன் என்னும் உணர்ச்சிகளை முதன் முதல் நாட்டிற் பொங்கி

யெழுந்து கிளர்ந்தோங்கச் செய்தவர்கள் நம் சமய ஆசிரியர் களே. வேறு பிற எந்த ஆசிரியரும் தமிழோடியைத்துத் தம்மைச் சுட்டிக் கொள்ளாத நிலையில், முதன் முதல் தம்மைத் "தமிழ் ஞான சம்பந்தன்" எனப் பெருமிதத்துடன் குறிப்பிட்டுக் கொண்ட வர் திருஞானசம்பந்தப் பெருமானேயாவர். நாட்டின் மூலை முடுக்கர் எங்கணும் சென்று, அக்காலத்தில் நிலவிய தவருன கொள்கைகளைக் கடிந்து, தமது கொள்கைகளைத் திறம்படவும் ஆற்றலோடும் பல்லாயிரக்கணக்கான மக்கள் மனங்கவரும் அழகிய வழிகளிலெல்லாம் பரப்பி வளர்த்த திருஞானசம்பந்தரின் செயலாண்மைத் திறம் பெரிதும் வியக்கற்பாலது! திருஞான சம்பந்தரின் அரும் பெரும் சிறப்புக்களை உணர்தற்குரிய வாயில் களுள்,

"புமியதனிற் ப்ரபுவான
புகலியில்வித் தகர்போல
அமிர்தகவித் தொடைபாட
அடிமைதனக் கருள்வாயே"

என 'வாக்கிற் சிறந்த அருணகிரிநாதரே' வியந்து புகழ்ந்து விரும்பும் வகையில், அப்பெருமானுர் வெவ்வேறு வகையில் வெவ்வேறு நடைகளில் புதிய புதியவாகப் பாடிய பாடல் வகைகளை ஆராய்ந்துணர்வதும் ஒன்ருகலின், அவற்றுள் ஒரு சில முதன்மையானவற்றை மட்டும் 'தாலிபுலாகநயம்' பற்றி, இயன்ற பெற்றி ஈண்டுச் சுருக்கமாகக் கண்டமைவோம்:—

1. **மொழிமாற்று:** 'கலையை மறைத்து வைத்துப் புலப் படுத்துதலிலேயே கலையுள்ளது' ('Art lies in concealing art') என்னும் உண்மைக்கு ஏற்ப, மொழிகளை மாற்றியமைத்து மயக்கம் விளைத்துப் பின்னர் வியப்பை யளிக்கும் ஒருவகைப் பாடலே மொழிமாற்று எனப்படும்.

"காட தணிகலம் காரரவம் பதி காலதனில்
தோட தணிகுவர் சுந்தரக் காதினில் தூச்சிலம்பர்
வேட தணிவர் விசயற் குருவம் வில்லுங் கொடுப்பர்
பீட தணிமணி மாடப் பிரமபுரத் தாரே"

எனவரும் திருப்பதிகம் மொழிமாற்று எனப்படும். இதன் கண், "காடது பதி, காரரவம் அணிகலம், காலதனில் தூச்சிலம்பர்,

சுந்தரக் காதினில் தோடது அணிகுவர்...." என மொழிகளை மாற்றிப் பொருள்கொள்ள வேண்டியிருத்தலால், இது மொழி மாற்று எனப்படுவதாயிற்று.

2. மாலைமாற்று: ஒரு செய்யுளை ஈறு முதலாகுமாறு ஓதினும் பொருள் பயந்து நிற்கும் சிறப்புடையது. இதனை ஆங்கிலத்தில் Palindrome என்பர்.

"யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணுகா
காணுகாமா காழியா மாமாயாநீ மாமாயா"

3. யமகம்: இது வடமொழிப் பெயர். தமிழில் இதனை 'மடக்கு' என்பர். ஒரு செய்யுளில் ஒருகாற் பயின்ற சொல்லே மீண்டும் பலகால் மடக்கி வருதலால் 'மடக்கு' என வழங்கும். இங்ஙனம் சொற்கள் செய்யுட்களில் மடக்கிவரும் முறைகள் 315 வகைப்படும் என்பர்.

"உற்றுமை சேர்வது மெய்யினையே
உணர்வது நின்னருள் மெய்யினையே..."

"ஆலநீழல் உகந்த திருக்கையே
ஆனபாடல் உகந்த திருக்கையே..."

4. ஏகபாதம்: ஒரு பாடலில் ஓரடியே மாறுமல் ஏனைய மூன்றடிகளாகவும் வந்து வெவ்வேறு வகையிற் பொருள் அமைந்து நிற்பது. அடிதோறும் எல்லாச் சீர்களும் மீண்டும் மடக்கி வரும் யமகமே 'ஏகபாதம்' எனப்படும்.

"பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்
பிரம புரத்துறை பெம்மா னெம்மான்"

5. இருக்குக் குறள்: இரு சீரால் இயன்ற அடிகளை யுடைய பாடல். வெண்பா வினத்தில் 'குறள்' என்பதொரு வகை இரண்டடிகளான் இயன்று வருவதுண்டாகலின், அதனினின்று இதனைப் பிரித்துக் காட்டுதற்கு, இஃது "இருக்குக் குறள்" எனப்பெயர் பெறுவதாயிற்று. "இருக்கு" என்பது வடமொழி யில் ஒருவகைச் செய்யுள் அமைப்புக்குப் பெயர். அதனுல்

அமைந்தமை பற்றியே "இருக்கு வேதம்" எனப் பெயர் வந்தது என்பர். இதனை. ஆசிரியர் சேக்கிழார் "தமிழ் இருக்குக் குறள்" என்ச் சிறப்பிப்பார்.

"வாசி தீரவே
காசு நல்குவீர்
மாசின் மிழலையீர்
ஏசல் இல்லையே"

என்பன போன்று வரும்பல திருப்பதிகங்கள் "திரு இருக்குக் குறள்" எனப்பெயர் பெற்று வழங்கும்.

6. **எழு கூற்றிருக்கை :** ஏழு கூறுகளால் தேர்போல அமைத்து, ஒன்றுமுதல் ஏழுவரை ஒவ்வோர் எண் மிகுத்தும் குறைத்தும், எண்ணலங்காரம் அமைய இணைக்குறள் ஆசிரியப் பாவாற் பாடப் பெறுவது. திருமங்கையாழ்வாரும், பதினொன்றும் திருமுறையில் நக்கீரதேவ நாயனரும் திருவெழு கூற்றிருக்கை பாடியுள்ளனர். இதற்குரிய இலக்கணத்தினை மாறன் அலங்காரம் முதலிய நூல்களிற் காணலாம்.

"...ஒருங்கிய மனத்தோடு
இருபிறப்பு ஓர்ந்து முப்பொழுது குறைமுடித்து
நான்மறை ஓதி ஐவகை வேள்வி
அமைத்து, ஆறு அங்க முதலெழுத்து ஓதி,
வரன்முறை பயின்று, எழுவான் தனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை..."

7. **ஈரடி :** இரண்டு அடிகளால் இயன்று குறள் வெண்பா முதலியவற்றின் வேறுபட்டு வருவது.

"பரசு பாணியர் பாடல் வீணையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்(து)
அரசு பேணி நின்றார் இவர்
தன்மை அறிவார் ஆர்?"

8. **ஈரடிமேல் வைப்பு :** செய்யுள்கள் பெரும்பாலும் நான்கடிகளால் அமைந்து வருதல் இயல்பு. அங்ஙனமின்றிச் செய்யுளின் நான்கடிகளில், முன்னை ஈரடிகள் ஒரு வகையாகவும் பின்னை ஈரடிகள் ஒரு வகையாகவும் அமைந்து, சந்தமும் பொருளும் ஒட்டி வைத்தது போலக் காணப்படுவது. இவ்வாறு

வைப்பாக உள்ள பின்னை ஈரடிகள் ஒன்றேயாக வேனும், வெவ்வேறுகவேனும் மகுடம் போல வருவதுண்டு.

"கொட்டமே கமழும் கொள்ளம் பூதூர்
நட்டம் ஆடிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே"

9. நாலடிமேல் வைப்பு: 'ஈரடி வைப்பு' என்பது போலவே, நான்கு அடிகளுக்கு மேல் இரண்டு அடிகள் சந்தமும் பொருளும் ஒட்டிவைத்தாற் போல வருவது.

"இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோஉன தின்னருள் ஆவடுதுறை அரனே"

10. திரு இராகம்: முடுகிய சந்தநலம் உடையதாய்க் குறில் நெடில் வல்லினம் மெல்லினம் இடையினம் என்னும் இவற்றில், ஏதேனும் ஒவ்வோரின எழுத்துக்களே மிக்குச் செறிந்து வரப் பாடல்தோறும் வெவ்வேறு வகையான எழுத்துக்களால் இன்னிசை நலங் கெழுமப் பாடப் பெறுவது. "வானவர்கள் தானவர்கள்" "வாளவரி கோளபுலி" "கோழை மிடருக கவிகோளும் இலவாக" என்பன போலும் தொடக்கமுடைய பல திருப்பதிகங்கள் திருவிராகம் எனப்படும். தமிழின் இனிய ஒலி நலத்தினையும் சொற்செல்வச் சிறப்பினையும் இப்பதிகங்களிற் காணலாம்.

11. வழிமொழித் திரு இராகம்: மேற்கூறப் பெற்ற திருவிராக அமைப்பிலேயே, சீர்காழியின் 12 திருப்பெயர்களையும் முறை பிறழாமற் கிளந்தெடுத்துக்கொண்டு, அவற்றினைப் பாடல்களின் கடைசியடிகளில் அவ்வவற்றிற்கு ஏற்ற எதுகை யமைதிகள் பெற வழிமொழிந்து பாடிச் செல்லுதலின், 'வழிமொழித் திருவிராகம்' எனப்படும். 'பல்பெயர்ப் பத்து' என்னும் பதிகமும் இவ்வாறே வரும்.

12. **சக்கரமாற்று:** சீர்காழியின் 12 பெயர்களும் சக்கரத்தின் ஆர்கள் போல முறைமுறையே மாறிமாறிச் சுழன்று வரப் பாடப்பெறுவது.

> "விளங்கியசீர்ப் பிரமனூர் வேணுபுரம்
> புகலிவெங் குருமேற் சோலை
> வளங்கவருந் தோணிபுரம் பூந்தராய்
> சிரபுரம்வண் புறவம் மண்மேல்
> களங்கமிலூர் சண்பைகமழ் காழிவயங்
> கொச்சைகழு மலமென்றின்ன
> இளங்குமரன் றன்னைப்பெற் றிமையவர்தம்
> பகையெறிவித் திறைவ னூரே"




பசுவானது நடந்துகொண்டே சிறுநீர் பெய்யும்போது, அந்நீர் ஒழுகிய தாரையானது எவ்வாறு நெளிந்த வடிவுடன் மாறி மாறிக் காணப்படுமோ, அவ்வாறு பாடப்பெறும் கோமூத்திரி என்னும் சித்திர கவியையும்; திருக்கயிலாயம் திருவானைக்கா திருமயேந்திரம் திருவாரூர் என்னும் நான்கு தலங்களின் பெயரும் ஒவ்வொரு பாடலிலும் கூடி அமையும்படி பாடப்பெற்ற 'கூடற் சதுக்கம்' என்னும் ஒருவகைப் பாடலையும் திருஞான சம்பந்தர் பாடியுள்ளார்.

13. **திருத்தாளச் சதி:** திருஞானசம்பந்தர் திருக்கோலக் காவில் இறைவன்பால் பொற்றாளம் பெற்றவராதலின், தாளக் கணக்கின் ஒலி நுட்ப நலங்கள் பலவும் அமைய, அரிய முறையிற் பாடிய 'பந்தத்தால் வந்தெப்பால்' என்னும் தொடக்கமுடைய திருப்பதிகம். இப்பதிகத்தின் சிறப்பினை "ஏழே ஏழே நாலே முன்றிசை இசை யியல்பா" எனத் திருஞானசம்பந்தப் பெருமானார் தாமே புகழ்ந்து போற்றியிருத்தல் நினைந்துணரற்பாலது. 'தேமாங்காய் தேமாங்காய் புளிமா தேமா கூவிளம் தேமா தேமா தேமாங்காய் கருவிளம் கரு விளங்காய்' என்னும் வாய்பாடு அமைய இப் பதிகம் பாடப்பெற்றுளது.

14. **யாழ்மூரி:** இதனை 'யாழ்முரி' எனவும் 'யாழ்முறி' எனவும்கூட வழங்குவர். திருப்பதிக இசை, கருவிகளின் அளவுபடாத சிறப்பும் மாட்சிமையும் செறிந்தது என்னும் உண்மையை உலகமக்கள் உணர்ந்துகொள்ளப் பாடப் பெற்ற "மாதர்மடப்

பிடியும் மடஅன்னமும் அன்னதோர் " எனத் தொடங்கும் திருப்பதிகம். இயற்றமிழ் நலமும் இசைத்தமிழ் நலமும் ஒருங்கே சேர்ந்த இத் திருப்பதிகத்தின் சிறப்பு சைவத் தமிழுலகம் நன்கறிந்தது.

" முன்னது கூவிளமே – அதன் - பின்னது காய்தனை
யடை - யது - தனி - நிரை - நடுவினிற் பொருந்தி
அன்னவை தம்பிறகே - இரு - சீர்களும் கூவிளம்
கரு - விளம் - பகுத் . திட இரண்டிரண் டெனவே
சொன்னவ்வை நாலசையாம் - அவை-சீருட னேவரச்
சொலும் - கடை - முடி - யவை - யொருவிளம் புளிமா
இன்னது யாழ்முறிப்பண் - என - ஞானசம் பந்தர்ப
கரும் - தனி - நடை - யுடைக் கவியெனப் பகரே "

முடிவுரை :— இங்ஙனமெல்லாம், திருஞானசம்பந்தர் பாடல்களிற் பலப்பல புதுமைகளையும் வியத்தகுநுட்பங்களையும் காணலாம். "பழைய முறைகளையே பின்பற்றிச் செல்லும் தன்மை யானது புதிது புதிதாகப் படைக்கும் திறனுக்குப் பெரும்பாலும் பகையாகவே அமைகின்றது' ("Conformity is often the enemy of creativity") எனத் திருவுளங்கொண்டு, தமது காலத்தில் தமிழ் நாட்டில் ஒருவகைப் புதுமையையும் புரட்சி யையும் மறுமலர்ச்சியையும் சீர்திருத்தத்தினையும் விளைத்து, நம் தமிழ் மக்களுக்குப் பல்லாற்ருனும் புத்துணர்ச்சியும் புத்துயிர்ப் பும் ஊட்டியருளிய திருஞானசம்பந்தப் பெருமானின் அருமை பெருமைகளை உணர்தற்கு, அவர் பாடிய இன்னோரனைய பல புதுவகைப் பாடல்களை ஆராய்தலும் ஒரு நெறியாகும். 'கிளியோபேட்ராவின் மூக்கின் அமைப்புச் சிறிது நீண்டோ குறுகியோ மாறியமைந்திருந்தால் உலக வரலாறே முற்றிலும் மாறியமைந்திருக்கக் கூடும்' ("If Cleopatra's nose had been an inch longer or shorter, all history would have been changed" —*Pascal*) என அறிஞர்கள் சொல்வதுண்டு. அதன் உண்மை எங்ஙனமாயினும், திருஞானசம்பந்தப் பெரு மான் போன்ற நமது சமய ஆசிரியர்கள் தோன்ருதிருந்திருப்பின் நமது தமிழ் நாட்டின் வரலாறே முற்றிலும் சீர்குலைந்து மாறிப் போய் ஒழிந்திருக்கக் கூடும். அங்ஙனம் மாறிப்போகாமல் காத்து நின்று, சங்க காலத்தில் வழங்காத இத்தகைய பலப்பல புதுவகைக் கவிதைகளை மிகமிக வியக்கத் தகும் வகையில்

பாடிக் காட்டி, நம் தமிழ் நாகரிகப் பண்பாட்டின் நலங்களை யெல்லாம் அழிந்துபடாமல் வளர்த்தளித்த அரும்பெருஞ் சிறப்பு, "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய" ஞானசம்பந்தர்க்கே உரிய தாகும். அதுபற்றியே, இவற்றின் அருமை பெருமைகளை யெல் லாம் நன்கினிது ஆராய்ந்துணர்ந்தவராகிய ஆசிரியர் சேக்கிழார் பெருமான், இன்னோரன்னைய ஞானசம்பந்தர் பாடல்களை யெல்லாம் நம்மனோர்க்குப் பட்டியபிட்டுத் தொகுத்துக் காட்டி, அவற்றின் நலங்களைத் தெருட்டுதற் பொருட்டு, அவற்றை "மூல இலக்கியம்" என விதந்தெடுத்து வியந்துரைத்துப் புகழ்ந்து போற்றி மகிழ் வாராயினர் என்பது!

"செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களால் மொழிமாற்றும்
வந்தசொற்சீர் மாலை மாற்றும் வழிமொழி எல்லா மடக்குச்
சந்த இயமகம் ஏகபாதம் தமிழ்இருக்குக் குறள் சாத்தி
எந்தைக் கெழுகூற் றிருக்கை ஈரடி ஈரடிமேல் வைப்பு"

"நாலடி மேல்வைப்பு மேன்மை நடையின் முடுகும் இராகம்
சால்பினில் சக்கரம் ஆதி விகற்பங்கள் சாற்றும் பதிக
மூல இலக்கியம் ஆக எல்லாப் பொருள்கோளும் முற்ற
ஞாலத் துயர்காழி யாரைப் பாடினார் ஞானசம்பந்தர்!"

---

# சோழ நாட்டுத் தலங்கள் - திருக்கருப்பறியலூர்

வித்துவான் திரு. பொன். முருகையன் அவர்கள்,
தமிழ்ப்பேராசிரியர், செந்தமிழ்க் கல்லூரி, திருப்பனந்தாள்.

"மூர்த்தி தலந் தீர்த்தம் முறையால் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச்சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

(தாயுமான அடிகள்)

தலம்:- சோணுட்டுத் தலங்களில் சிறந்த தலம். காவிரி நதியின் வடக்கே சிகாழிப் பதிக்கு மேற்கே எட்டு மைல் தொலைவில் உள்ளது. யூதிகாபுரம், கன்மநாசபுரம் என்பன இத்தலத்தின் வேறு பெயர்கள். சூரியன் வழிபட்டமையால் ஆதித்தபுரி, தலைஞாயிறு என்னும் பெயர்களும் உண்டு. பிறவியாகிய (கரு) வேரினைப் பறித்தெடுத்து மறுமை யின்பம் நல்கும் தலம்.

தீர்த்தம்:- விநாயக தீர்த்தம், சூரிய தீர்த்தம், வசிட்ட தீர்த்தம், அநுமதீர்த்தம், நிம்பபுஷ்கரணி, சங்க புஷ்கரணி, பொற்றாமரை, செங்கழுநீர்த் தடாகம் என்பன.

மூர்த்தி:- ஸ்ரீ குற்றம் பொறுத்த நாதர் — இறைவன்
கோல்வளை நாயகி — இறைவி.
மலையில் உள்ள மூர்த்திகள் — தோணியப்பர் சட்டைநாதர்.

குற்றம் பொறுத்த நாதர்:-

இறைவன் குற்றம் பொறுக்கும் இயல்புடையவன். ஆன்மா – பசு; இறைவன் – பதி. எனவே மக்கள் துன்பங்களை நீக்கிக் குற்றம் பொறுக்கும் செயல் இறைவனின் இயல்பாகும். இவ்வுலகத்தில் பிறருடைய குற்றங்களையே எடுத்துக் காட்டுவார் பலர். இறைவன் கவிக்குக் குற்றம் கூறினுன். நக்கீரன் பின்னர் தன் தவற்றை உணர்ந்தான். இறைவன் அருள்

பெற்ருன். சொற்குற்றம் அன்று பொருட்குற்றம் என்று துணிந்து வாதாடினுன் கீரன். கீரனைப் போன்று சொற் பொருட் குற்றங்களை நேரில் எடுத்துக் கூறும் புலவர் இக் காலத்து யாரும் இல்லை. மறைந்து கூறுவார் பலர். ஆன்மாக் களின் நிலை இது. பதியாகிய இறைவன் குற்றத்தைக் குண மாக் கொள்வான் அதனுல் இறைவன் பெயர் குற்றம் பொறுத் தவன் - குற்றம் பொறுத்திசர் என்பதாயிற்று. இராவணன் பல பிழைகளைச் செய்தும் இறுதியில் அவனுக்கு அருள் செய்த தலம் ஆகையால் இத்தலம் சிறப்புடையது.

**தலச் சிறப்பு:-** இறைவன் அமர்ந்திருக்கும் இடம் இரத்தின கிரியாகிய மலை. துஷ்ட நிக்ரஹ சிஷ்ட பரிபாலனராய் இறை வன் எழுந்தருளியிருக்கிருர். இவரைக் காலையிலும் மாலையிலும் வணங்குவார்க்குப் பேரின்பம் கிடைக்கும். கௌதமர், வாம தேவர், காபாலி, அங்கிரஸ் முதலியோர் பூசித்து வீடுபேறு பெற்ற ஒரு சிறந்த தலம் இதுவாகும். சிவாபாரதம் செய்த அநுமன் கன்மநாச புரமாகிய இத்தலத்தில் பூசித்துப் பாவம் நீங்கப் பெற்ருன்.

**மூர்த்திகளும் சிற்பங்களும்:-**

விரிந்த செஞ்சடை யாட நடமிடும் நடராசப் பெருமாள் திருவுருவம் சிறப்புடன் காட்சியளிக்கிறது.

நாரை இறைவனை வழிபடும் காட்சி-சிற்பவடிவில் அமைந் துள்ளது. இச்சிற்பம் மகாமண்டபத்து வடபக்கச் சுவரிலுள்ளது.

**திருப்பணியும் மேற்பார்வையும்:-**

எட்டு ஆண்டுகளுக்கு முன் இக்கோயிலில் திருப்பணி வேலை முடிந்து குட்முழுக்கு விழா நடைபெற்றது. 27 விண் மீன்கள் என விளங்கும் 27 தலங்களை மேற்பார்வை செய்து நிர்வகித்து வரும் தருமபுர ஆதீனத்தார் அவர்கள் பரிபால னத்துள் அடங்கியது இக்கோயில்.

பக்தர்கள் தரிசிக்க வேண்டிய சிறந்த தலம் ஆகும். இத் தலத்தைச் சென்றேனும் கண்டேனும் திசை நோக்கியேனும் வழிபடுபவர் சிறந்த இம்மை மறுமை நலன்களையடைதல் திண்ணம்,

---

# அருட் செல்வம் வேண்டுமா?

வித்துவான். திரு. ம. சிவசம்பு அவர்கள்,
*தமிழ்ப் பேராசிரியர், பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.*

---

உலகத்தில் செல்வங்கள் என்று குறிக்கப்படுவன பல உண்டு. வள்ளுவர் பொருட் செல்வத்தைத் தவிர உயிர்க்கு வேண்டிய சில செல்வங்களையும் கூறுகிறுர். அடக்கம், அவா அற்ற நிலை முதலிய பண்புகளையும் செல்வம் என்கிருர். கேடில் விழுச் செல்வம் கல்வி என்கிருர். செல்வத்துள் செல்வமாக வள்ளுவர் போற்றுவது இரண்டு. ஒன்று செவிச் செல்வம். மற்றொன்று அருட் செல்வம். செல்வத்துள் செல்வமாகப் போற்றப்படும் அருட் செல்வம் உயிர்க்கு உற்ற துணையாக இருக்கிறது. அச் செல்வம் எங்கு இருக்கிறது, அதைப் பெறுவது எப்படி? அச் செல்வத்தால் ஏற்படும் பயன்கள் யாவை? அச் செல்வம் நமக்கு வேண்டுமா? என்பதைப்பற்றிப் பார்ப்போம்.

## அருட் செல்வம்

வாழ்வுக்கு இன்றியமையாத பண்பு அன்பு. அன்பிற்கும் அருளிற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. அன்பிலிருந்துதான் அருள் பிறக்கிறது. அன்பு என்ற தாய் ஈன்ற குழந்தையே அருள். அன்பு–தாய். அருள்–சேய். அன்பின் மகளாகிய அருள், பொருட் செல்வம் என்ற செவிலியால் வளர்க்கப்படுகிருள்.

> "அருள்என்னும் அன்பீன் குழவி பொருள்என்னும்
> செல்வச் செவிலியால் உண்டு"

அன்பு என்பது நம்மோடு தொடர்புடையார் மாட்டுத் தோன்றுவது. அருள் என்பது தம்மோடு ஒரு தொடர்பும் இல்லாதார் மாட்டு, அவர் துயரால் கண்டவிடத்து உண்டாகும் இரக்கமாகும். அருள் என்பது பிறர் வருத்தத்திற்குப் பரியும்

கருணை என்கிறார் இளம்பூரணர். இல்லறத்திற்கு அன்புடைமை போல துறவறத்திற்கு அருளுடைமை என்கிறார் பரிமேலழகர். தலைமகனுக்கு வேண்டிய பத்துப் பண்புகளில் அருளும் ஒன்று என்கிறார் தொல்காப்பியர். தலைவனுக்கு அன்பும் அருளும் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் அரசர்களுக்கு என்கிறார் நரிவெரூஉத்தலையார். அரசனே! "அருளையும் அன்பையும் நீக்காதே. அருளையும் அன்பையும் நீங்கியவர்கள் நரகத்திற்குச் செல்வார்கள். அவர்களுடனே நீ சேராதே" என்று வற்புறுத்துகிறார்.

"அருளும் அன்பும் நீங்கி நீங்கா
நிரயம் கொள்ளுபவ ரொன்றுதுகாவல்
குழவி கொள்ளுபவரின் ஓம்புமதி

[நிரயம்=நரகம்]

வெண்பூதியார் என்ற புலவர்" இவ்வுலகத்து மக்கள் பொருள் செல்வத்தையே உறுதிப் பொருளாகக் கருதுகிறார்கள். அருட் செல்வத்தை ஏற்றுக் கொள்ள யாருமில்லை என்கிறார்.

"இவ்வுலகத்துப்
பொருளே மன்ற பொருளே
அருளே மன்ற யாருமில்லதுவே."

## அருளும் பொருளும்

வெண்பூதியார் கூறியது உண்மையே; பொருட் செல்வத்தை விரும்புவது போல அருட் செல்வத்தை விரும்புவதில்லை. இவ்வுலக வாழ்க்கைக்குப் பொருட் செல்வம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு அவசியம் அருட் செல்வம். பொருட் செல்வத்தைவிட அருட் செல்வம் உயர்ந்தது. பொருட் செல்வம் எல்லோரிடமும் உண்டாகும். இழிந்தார் மாட்டும் பொருட் செல்வம் உண்டு. "பொருட் செல்வம் பூரியார் கண்ணும் உள" என்பதன் மூலம் அருட் செல்வத்தின் சிறப்பை அறிவிக்கிறார். பொருட் செல்வம் நிலையற்றது அருட் செல்வம் நிலைத்தது. பொருட் செல்வத்தை இழந்தால் மீண்டும் பெறலாம். அருட் செல்வத்தை இழந்தால் மீண்டும் பெறலரிது.

"பொருள்அற்ருர் பூப்பர் ஒருகால் அருளற்ருர்
அற்ருர்மற் ருதல் அரிது."

அருள் அற்றவர் எக்காலத்தும் அதைப் பெற முடியாது என்பதை 'மற்ருதல் அரிது' என்பதன் மூலம் அரிவித்தார். பொருள் இல்லாதவர்க்கு இவ்வுலகத்து இன்பம் இல்லை. அதுபோல உயிர் களிடத்து அருளில்லாதவர்களுக்கு வீட்டுலகத்து இன்பம்இல்லை.

"அருள்இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள்இல்லார்க்கு
இவ்வுலகம் இல்ஆகி யாங்கு."

## அறமும் அருளும்

அருள் உள்ளவன்தான் அறம் செய்கிருன். அருள்அற்ருர் சிலர் புகழ்கருதி அறம் செய்கிருர்கள் அவ்வறம் பயனற்றது. அறிவு தெளியாதவன் ஒரு நூலின் உண்மைப் பொருளைக் கண் டதைப் போன்றதே அருள் இல்லாதவன் செய்யும் அறம்.

"தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்ருல் தேரின்
அருளாதான் செய்யும் அறம்."

## அருட்செல்வம் இருக்கும் இடம்

தனக்கென வாழாது பிறர்க்கு என வாழும் தொண்டர் களிடம் அருட்செல்வம் இருக்கிறது. அவர்கள் உள்ளம் என்னும் பாங்கியில் (Bank) அருட்செல்வத்தை நிரப்பி இருக்கிருர்கள். அருட்செல்வம் உள்ள இடத்தில்தான் முக்கட் செல்வனும் தங்கு கிருன். அருட்செல்வம் உடையவர்கள் நிலவைப் போன்றவர் கள். தன்னிடம் உள்ள குறைகளைப் போக்காது உலக இருளைப் போக்கப் பாடுபடுவார்கள். பிறர் துன்பம் கண்டவிடத்து நெருப்புறு வெண்ணெய் போல, நீர் உறுஉப்புப் போல கரைந்து உருகுவார்கள். பிறர்துன்பம் கண்டு கண்ணீர் விடுபவர்கள். இவர்கள் தான் உண்மையான பெரியவர்கள்.

"பெரியவர் தந்நோய் போற்பிறர் நோய்கண்டுள்ளம்
எரியின் இழுதாவர் என்க — தெரியிழாய்
மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்."

அருட் செல்வம் உள்ளவர்களை, அவருடைய தவத்தால் குணத்தால், அன்பால், பேச்சால் அறியலாம் என்கிறார் பட்டினத்தடிகள்.

"அருளுடையோரைத் தவத்திற்
குணத்தில் அருளில் அன்பில்
இருளறு சொல்லினுங் காணத்
தகுங்கச்சியே கம்பனே"

## அருளைப் பெறுவது எப்படி?

அருட் செல்வத்தை பெறவேண்டுமானால் அடியவர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும். நம் நாட்டுப் பெரியவர்கள் அருட்செல்வம் நிரம்பிய அடியவர்களுக்குத் தொண்டு செய்து தான் அச்செல்வத்தைப் பெற்றார்கள். இக்கருத்தை தாயுமானவர் பாடல் நமக்கு அறிவிக்கிறது.

"எவ்வுயிரும் என்னுயிர் போல எண்ணி இரங்கவும் நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே!
தம்முயிர்போல் எவ்வுயிருந்தான் என்று தண்ணருள்கூர்
செம்மையருக்கு ஏவல் என்று செய்வேன் பராபரமே!"

இராமலிங்க சுவாமிகளும் "எத்துணையும் பேதம் உறாது எவ்வுயிரும் தம் உயிர் போல எண்ணி, யார் மகிழ்கிறார்களோ; அவர் உள்ளத்தில் தான் இறைவன் நடம்புரிகிறான். அந்த வித்தகர் தம் திருவடிகளுக்கு ஏவல் செய்திட என் சிந்தை மிக விரும்புகிறது" என்கிறார்.

## அருளின் பயன்

அருளே வாழ்க்கைத் துணையாகும். அருள் உடையவனுக்கு நரகம் இல்லை. துன்பம் இல்லை. இறைவன் அருள் உடையவன் உள்ளத்தில் தான் நடம்புரிகிறான். அருள் உடையவர்கள்தான் இறைவனை உணர முடியும். இறைவன் அருள் நமக்கு இருந்தால் தான் நாம் அவ்விறைவனை உணரமுடியும், என்கிறார் நாவுக்கரசர்.

" அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்
அவன் அருளே கண்ணுகக்காணில் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வணத்தன்
இவன் இறைவன் என்றெழுதிக்காட்டொணுதே."

மாணிக்கவாசகர்,

'அவன் அருளாலே அவன் தாள்வணங்கி' என்கிருர். அவன் அருள்பெற்று உலகத்துன்பம் போக்க உயிர்க்கு அருள் அல்லது வேறு துணை இல்லை. உயிர்க்கு உறுதி பயக்கும் அருட்செல்வத்தை வேண்டாம் என்று கூறுவாரும் உளரோ? உலகத்தில் உள்ள பொருள்களை எல்லாம் ஆராய்ந்தாலும் உயிர்க்குத் துணை அருட் செல்வமே யாகும்.

" நல்லாற்ருன் நாடி அருளாள்க பல்லாற்ருன்
தேரினும் அஃதே துணை."

வளர்க அன்பு! ஓங்குக அருள்!



# செல்வத்துப் பயனே ஈதல்

திருமதி N. S. கமலேசுவரி அவர்கள்
6. B. கணபதி காலனி, ராயப்பேட்டை, சென்னை.

பொருளின் பெருமையை - அதன் இன்றியமையாமையை உணர்ந்தவர் பலர். ஆனால் அதன் பயனை - உண்மைப் பயனை - உணர்ந்தவர் மிகச் சிலர்.

" பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள் "

என்பதை விரைவில் மனம் அறிகிறது. ஆனால்,

" தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு "

என்ற பொருள் மொழியைத் தெளியச் சிறிது காலம் வேண்டும். எல்லோரும் வாழநினைக்கும் அன்புள்ளம் வேண்டும். ஈகையால் பெறும் புகழே சிறந்தது என்று பகுத்துணரும் அறிவுத்திறன் வேண்டும். இவ்வாறு புகழுடலால் இன்றும் நம்மிடையே வாழ்பவரை இலக்கியம் காட்டுகிறது.

செல்வத்தின் செழிப்பிலே புரண்ட வள்ளல்கள் உள்ளம் அச்செல்வப் பயனின் முழுமையை அனுபவித்தது என்றுதான் சொல்ல வேண்டும். " ஈத்துவக்கும் இன்பம் " அறிந்தவர்கள் அவர்கள். ஆற்றுப்படைகள் கூறுவதெல்லாம் என்ன ?

" கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறுஅர்க்கு அறிவுறீஇச்
சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும் "

[சூத். 88. புறத்திணை இயல் தொல்காப்பியம்.]

என்று தொல்காப்பியர் ஆற்றுப்படைகளுக்கு இலக்கணம் வகுக்கிறுர். இல்லாத வறுமையாளன் வள்ளல் புகழைப் பாடு கிறுன் மற்ருெரு வறுமையாளனிடம். இந்த வள்ளன்மையால் வளர்ந்த புகழுக்கு இலக்கியமாக இருப்பவர் பலர்.

இளங்கோ கோவலனே உயர்த்த இந்தப் பண்பைக் கருவி யாக்குகிறுர்.

" வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்துவா னென்பான்
இருநிதிக் கிழவன் மகன் "

என்று கோவலனை அறிமுகப்படுத்துகின்றுர். " மண் தேய்த்த புகழினுன் " என்று மங்கல வாழ்த்துப் பாடலில் பெற்ற புகழ் மொழிக்கு அடைக்கலக்காதை விரிவுரை தருகிறது. மாதவியின் குழந்தைக்கு மணிமேகலை என்று பெயரிட்ட நாளில்,

"செம்பொன் மாரி செங்கையிற் பொழி" ந்தான். அந் தணன் மனைவி ஒருத்தி தன் குழந்தையைக் காத்த கீரியைத் தவருக எண்ணிக் கொன்று விடுகிருள். அந்தணன் உன் கையால் உண்ணல் தகாது என, வடமொழி வாசகம் அடங்கிய ஏடு ஒன்று கொடுத்து இதன் பொருளை உணர்வோரிடம் கொடு எனக்கூறி வடதிசை சென்று விட்டான். இவள் துயர்கண்ட கோவலன் அவளை அழைத்து.

" அஞ்சல் உன்றன் அருந்துயர் களைகேன்
நெஞ்சுறு துயரம் நீங்குக "

என்று

" தீத்திறம் புரிந்தோள் செய்துயர் நீங்கத்
தானஞ் செய்தவள் தன்றுயர் நீக்கி "ுனன்.

இதனுல்,

" கானம் போன கணவனைக் கூட்டி
ஒல்காச் செல்வத் துறுபொருள் கொடுத்து
நல்வழிப் படுத்த செல்லாச் செல்வ "

என்று மாடலன் வாயிலாக இளங்கோவின் புகழ்மொழிக்கு இலக்காகிறுன். அவன் செல்வம் செல்லாச் செல்வமாயிற்றும் ஆம்! அவன் பெற்றது நிலையான புகழ்ச் செல்வமன்றே!

அவனே,

“ சலம்புணர் கொள்கைச் சலதியோ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
இலம்பாடு நாணுத் தருமெனக்கு ”

எனக் கண்ணகியிடம் உருகுகிறான். வான்பொருள் தொலைந்த நெறியெலாம் பிறருக்கு ஈவதன் மூலமே. அவனை நாம் முதலில் குறை கூறுவதெல்லாம் பிறன்மனை நயந்த குற்றத்திற்கே யன்றிப் பொருளைத் தொலைத்ததற்கன்று.

கொலைக்களக் காதையில் தன் குறைகளையெல்லாம் கண்ணகியிடம் சொல்லி வருந்துகிறான். அவளோ தான்பட்ட பிரிவுத் துயரைக் கூறாது,

“ அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை ”

என்று கோவலனைப் பிரிந்ததால் இழந்த செல்வங்களைத் திரட்டு கின்றாள். எல்லாம் பிறர்க்கென வாழும் இல்லக்கிழத்தியின் கடமைத் துடிப்புகளாகத் தொடர்கின்றன.

“ தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தா றோம்ப றலை ”

என்பதன்றோ வள்ளுவன் தரும் இலக்கணம்! துறந்தார், வறிய வர், இறந்தார் எல்லோர்க்கும் இல்வாழ்பவனே துணையாவான். கோவலன் உயர்விற்கு அவன் ஈகை துணையாயிற்று.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தன் வீரமெல்லாம் தோன்ற புறப்பாடல் ஒன்று பாடுகிறான். என்னை இளையன் என்று இகழ்வோரையெல்லாம் முரசொடு கைக் கொள்வேன். இல்லையெனில் என்னைப் புலவர் பாடாதொழி யட்டும், குடிபழித் தூற்றும் கோலை உடையவனாவேன் என்றெல் லாம் கூறியவன் இறுதியில்,

“ புரப்போர் புன்கண் கூர
இரப்போர்க் கீயா இன்மையா னுறவே ”

என்று ஈகையில்லா வாழ்வை இகழ்கிறான். இரப்போர்க்கு இல்லையென்னாது ஈயும் நிலைமாறி இன்மைநிலை எனக்கு வந்து விடும் எனச் சபித்துக் கொள்கிறான். அவன் வீரத்தில் அவனுக்கு அவ்வளவு நம்பிக்கை. மன்னர்கள் ஈயாத இன்மை நிலையை இழிவாகக் கருதினர் என்பது தெளிவாகின்றது.

"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்
ஈயே னென்றல் அதனினும் இழிந்தன்று"

என்கிறார் கழைதின்யானையார் என்ற புலவர்.

கவிஞனுக்கே உரிய சொத்தான வறுமைச் செல்வம் பெற்றவன் அவன். அவன் வீட்டில் அவன் புதல்வன் தாயிடம் பாலமுது பெறாது கூழும் சோறும் தேடி வறுங்கலம்திறந்து அழுகிறான். தாயோ புலி வரவு காட்டி அச்சுறுத்தியும் மதியங் காட்டி மகிழ்வித்தும் தோல்வி கண்டாள். இதையெல்லாம் குமணவள்ளலிடம் மனமுருகச் சொல்லிச் செல்வம் பெற்றுத் திரும்புகிறார் புலவர். அவர் வீடு திரும்பி மனைவியிடம் சொல்லும் பாடலைப் பார்ப்போம்,

"நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க் கென்னாது என்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்
எல்லோர்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமண னல்கிய வளனே."

இப்பாடல் முழுவதிலும் புலவருடைய உள்ளம் பிரதிபலிக்கிறது. வைத்து வாழ என்னாதே என்று இரந்து பெற்றவனே கூறும் போது சேர்த்து வைத்த செல்வர்கள் கடமையை எடுத்துச் சொல்லவும் வேண்டுமோ?

---

(தொடரும்)

# கந்தபுராண படனநிதி முதற்பொருள் ரூ.15.000/-



புராண நன்னுயகம் என்று போற்றப் பெற்றதும், அறு முகம் உடையவோர் அமலன் மாக்கதை கூறுவதும், முருகப் பெருமானுல் 'திகடசக்கர' என்று அடியெடுத்துக் கொடுக்கப் பெற்றதும், நாடோறும் காஞ்சிக் குமரகோட்டம் முருகன் சந்நிதியில் பாடிய பாக்களை ஓலையில் எழுதி அர்த்தஜாம பூசை முடிந்ததும் வைத்துத் திருக்கதவம் மூடி மறுநாள் காலை பூசைக்குச் செல்லும்போது பார்க்கையில் பாடல்கள் முருகப் பெருமானுல் திருத்தம் செய்யப்பெற்ற சிறப்பு வாய்ந்ததும், செந்தமிழ்க்கந்தன் திருக்கரம் பட்ட ஒப்புயர்வற்றதும், சைவ சித்தாந்தக் கருவூலம் என்று சமய உலகிலும், இலக்கிய பொக்கிஷம் என்று கலையுலகிலும் போற்றப் பெறுவதும், காவிய இலக்கணம் நிரம்பப் பெற்றதும், தணிந்த தெளிந்த ஆற்று நீரோட்டம் போல எளிதான நற்றமிழ் நடையில் உள்ளதும், கச்சியப்ப சிவாச்சாரியாரால் இயற்றப் பெற்றதுமான தமிழ்க் கந்தபுராணபடனம் செய்வார்க்கு ஊதியம் அளித்தற் பொருட்டுத் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் இந்நிதி நிறுவப் பெற்றது. இது "கந்தபுராணபடனநிதி" எனப் பெயர் பெறும்.

2. இதற்குரிய சேம வைப்பு ரூ. 15,000/- ரூபா பதினைந் தாயிரம். ஆண்டொன்றுக்கு 3% வட்டி தரக்கூடிய சர்க்கார் கடன் தாள்களில் முதலீடு செய்யப்பெற்றுள்ளது. 3%கன்வர்ஷன் லோன் ஆப் 1946 சர்க்கார் கடன் பத்திரம் எண் சிஏ. 221895 -ரூ. 5,000/- சிஏ. 222427 - ரூ. 5,000/- சிஏ. 222428/-ரூ. 5,000/- ஆக ரூபாய் 15,000/- இந்நிதி நம்பேரிலும் நமக்குப்பின் உரிமை யுள்ளவர்கள் பேரிலும் இருந்து வரும்.

3. இம்முதற் பொருளினின்றும் கிடைக்கும் வட்டித் தொகை ஆண்டு தோறும் திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், திருவாவினன்குடி, /பழநி/, திருவேரகம் / சுவாமிமலை /, முதலிய முருகப்பெருமான் திருத்தலங்களிலும்; காஞ்சி, திருவாரூர், திருவானைக்கா, திருவண்ணமலை, தில்லை, மயிலை,

மதுரை, முதலிய சிவத்தலங்களிலும் அந்தந்த ஆண்டு நம்மால் குறிப்பிடப்பெறும் ஒரு தலத்தில் ஒவ்வொரு செவ்வாய், வெள்ளி, ஞாயிறு ஆகிய நாட்களில் கந்தபுராண படனம் செய்வாருக்கு மாதந்தோறும் ரூ. 25/- ஊதியம் அளிக்கவும், புராணம் பூர்த்தி பெறும் நாளில் அன்னுருடைய தகுதிக்குத் தக்கவாறு ரூ. 50/- முதல் ரூ. 100/-க்கு மேற்படாமல் நம்அபிப்பிராயத்திற்கிணங்கச் சன்மானம் அளிக்கவும் பயன்படுத்தப்பெறும்.

4. கந்த புராண படனம் செய்யக் கட்டுப்பாடுகளாவன:-

அ. ஆண்டு தோறும் மேலே பாரா 3-ல் குறிப்பிடப் பெற்றுள்ள தலங்களுள் நம்மால் குறிப்பிடப்பெறும் ஒரு தலத்தில் ஒவ்வொரு வெள்ளி, செவ்வாய், ஞாயிறு, ஆகிய நாட்களில் மாலையில் கந்த புராண படனம், நம்மால் நியமிக்கப் பெறும் சைவசீலமுள்ள பழுத்த தமிழ்ப்புலவர் ஒருவரால் நிகழ்த் தப்பெறும்.

ஆ. எம்மாதத்திலாவது இதிற் குறிப்பிட்ட வெள்ளி, செவ்வாய், ஞாயிறு, ஆகிய கிழமைகளில் வருட உற்சவம் முதலியன ஏற்பட்டு, அந்நாட்களில் புராண படனம் செய்ய வசதியின்ருயின் மேற்கண்ட நாட்களில் புராண படனத்தை நம்முடைய அனுமதியின்பேரில் நிறுத்திவைக்கவும், படனம் செய்வோர் விரும்பிஞல் சனிக்கிழமைகளில் படனம் தொடர்ந்து செய்யவும் அனுமதிக்கப்பெறும். அதிகப்படியாகச் சனிக்கிழமை களில் படனம் செய்தாலும் மாத ஊதியம் ரூ. 25/- இருபத் தைந்து மட்டுமே (மேல் பாரா 3-ல் குறித்தவண்ணம்) அளிக்கப் பெறும்.

இ. ஷை புலவர் பல்கலைக்கழகத்து வித்துவான் அல்லது புலவர் தேர்வில் வெற்றி பெற்றவராகவும், அல்லது பி. ஏ., பி. ஒ. எல், முதலிய பட்டதாரியாகவும், சொல்வன்மை உடைய வராகவும், சைவ சித்தாந்த சாத்திரப்பயிற்சி உடையவராகவும், சிவபக்தியும் சீலமும் உடையவராகவும் இருத்தல் வேண்டும். இத்தகைய தகுதிகள் உடையவரே கந்தபுராண படனம் செய்ய நம்மால் ஆண்டு தோறும் நியமிக்கப்பெறுபவர் ஆவர்.

ஈ. ஒவ்வொரு நாளும் சுமார் 75 பாடல்கள் விதம் கந்த புராணத்திலுள்ள பாடல்கள் 10346-ம் ஆரம்பம் முதல் வரிசைக் கிரமமாக பொருள் விளங்கப் படித்துக் கருத்துரை கூறுவதுடன் ஆங்காங்கு அவசியத்துக்குத் தக்கவாறு விசேட உரையும் கூற வேண்டும். பாடல்கள் படனம் செய்யும் போது சந்தத்துடன் படிக்க வேண்டும். உரை கூறும்போது கேட்போர் மனங் கொள்ளுமாறு பக்திப் பெருக்குடன் கூற வேண்டும். புராணம் முழுவதையும் அதாவது 10346 பாடல்களையும் பன்னிரண்டு மாதங்களுக்குள் படன பூர்த்தி செய்தல் வேண்டும்.

உ. அன்றுடம் படனம் செய்யப்பெற்ற பாடல்களின் எண்ணிக்கை விவரமும் தொடக்கத்திலிருந்து அன்றுவரை படனம் செய்யப்பெற்ற மொத்தப் பாடல்களின் விவரமும் நமக்குத் தபாலில் நாடோறும் தெரிவித்துக்கொள்ளுவதுடன், மாத முடிவில் புலவர் தன் பணியைச் சரிவர நிறைவேற்றியதற்கு அந்தந்த தேவஸ்தான நிர்வாக அதிகாரி அல்லது டிரஸ்டியிடம் ஒரு அத்தாட்சிப்பத்திரம் வாங்கி நமக்கு அனுப்பி வரவேண்டும். அது கிடைத்ததும் படனம் புரிபவருக்கு அந்தந்த மாத ஊதிய மாகிய ரூ. 25/- ரூபாய் இருபத்தைந்தும் - மணியார்டர் மூலம் அனுப்பப்பெறும்.

புராண படனம் பூர்த்திபெறும் காலத்து 30 நாட்களுக்கு முன்னர்த் தெரிவித்துக்கொண்டால் மேலே 3-வது பாராவில் கண்ட வண்ணம் தகுதிக்குத்தக்கவாறு ரூ. 50/- முதல் ரூ. 100/க்கு மேற்படாத தொகை சன்மானமாகப் புராண படன பூர்த்தி நாளில் அளிக்கப்பெறும். இத்தொகை வட்டி வருமானத் திற்கேற்பக் கூட்டவும் குறைக்கவும் பெறும்.

ஊ. நம்மால் நியமிக்கப்பெறும் புலவர் நமது கட்டுப் பாடுகளின்படி நடக்கத் தவறினும் அல்லது புராண படனம் செய்கையில் சரிவரச் செய்யாது போனாலும், வேறு எக்கார ணத்தைக் கொண்டாவது படனம் செய்ய இயலாவிடினும் அவர் ஸ்தானத்தில் வேறு ஒருவரை நியமிக்க நமக்கு உரிமையுண்டு.

எ. ஒவ்வொரு ஆண்டும் கந்தர்சஷ்டித் திருவிழாத் தொடக்க நாளில் நம்மால் குறிப்பிடப்பெறும் ஒருதலத்தில்

புராண படனம் துவக்கப் பெறல்வேண்டும். புலவர்கள் ஒவ்வொரு ஆண்டும் ஆகஸ்ட்டு மாதம் 15-ந் தேதிக்குள் அவரவர்களுடைய தகுதி, நற்சாட்சிப் பத்திரங்கள் முதலிய வற்றுடன் நமக்கு விண்ணப்பித்துக் கொள்ளவேண்டும். தேர்ந் தெடுக்கப்பெற்ற புலவருக்கு மட்டும் உத்தரவு அனுப்பப்பெறும். புலவர்களைத் தேர்ந்தெடுப்பதில் நாம் செய்யும் தீர்ப்பே முடிவான தாகும்.

5. இவ்வருமானம் வேறு எந்த முறையிலும் பயன்படுத்தப் பெற மாட்டாது. நம்மாலும் நமக்குப்பின் வரும் உரிமையுள்ளவர் களாலும் இந்த நிதி பரிபாலனம் செய்யப்பெற்று வரும். இந்த நிதி அரசியலாரால் திரும்பி யளிக்கப்பெரின் அதிகவட்டி தரக் கூடிய அரசியல் கடன்தாள்களில் முதலீடு செய்யப்பெறும்.

திருப்பனந்தாள் 23-3-1960 } (Sd.) *Kasivasi Arulnandi Tambiran*

---

Registered at Tiruvadamaruthur Sub Registrar's office on 24-3-1960 as No. 17 Book No. 4, volume 48 pages 255 to 259.

குறிப்பு: இவ்வாண்டு திருச்செந்தூரில் விரபாண்டியன்பட்டினம் உயர்நிலைப்பள்ளி தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் திரு. பா. சந்திர சேகரன் பிள்ளை அவர்களால் கந்தபுராணபடனம் செய்யப்பெறும்.

## 1135-ம் ளு வைகாசி, ஆனி, ஆடி மாதங்களில்
## கலைக்கோவிலில் வரப்பெற்றுக்கொண்ட புத்தகங்களின் விபரம். (தொடர்ச்சி)

| தொடர் எண் | புத்தகத்தின் பெயர் | ஆசிரியரின் பெயர் |
|---|---|---|
| 7695 | திருமுறை தோத்திரத் திரட்டு | வெளியிடுபவர் க. வெ. அருணகிரி முதலியார் |
| 7696 | திருநாவுக்கரசு சுவாமிகள் வரலாறு | சுயப்பாக்கம் சோமசுந்தரம் செட்டியார் |
| 7697 | தருமதீபிகை | ஜெகவீரபாண்டியனுர் |
| 7698 | தேவையுலா-அரும் பதவுரையுடன் | பலபட்டடைச் சொக்கநாதபிள்ளை |
| 7699 | பழநி க்ஷேத்திர மகிமை | சி. பி. மாசிலாமணி முதலியார் B. A., |
| 7700 | உளநூல் | வித்துவான் திரு. M. குஞ்சிதபாத தேசிகர் |
| 7701 | மாணிக்கவாசகர் நிலைமண்டில வாசிரியப்பா (குறிப்புரை யுடன்) | வித்துவான். வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் |
| 7702 | ஸ்ரீமேதா தக்ஷிணுமூர்த்தி மஹாபிஷேக அசோசியேஷன்-முதலாண்டு நிறைவு மலர் – 1956 | ஸ்ரீ மேதா தக்ஷிணுமூர்த்தி மஹாபிஷேக அசோசியேஷன் - மாயூரம் |
| 7703 | போன்ஸ்லே வம்ச சரித்திரம் | தஞ்சை சரஸ்வதி மஹால் வெளியீடு |
| 7704 | மொழி அரசி - முதற்பாகம் தமிழ்த் தெய்வமாலை முதற் பகுதி - தமிழ்ப் புகழ் | சாமி வேலாயுதம் பிள்ளை, B. A., L. T., |
| 7705 | சைவசித்தாந்த மகா சமாஜம்-பொன்விழா மலர் | சைவசித்தாந்த மகாசமாஜம் சென்னை–14 |
| 7706 | தேவையுலா-அரும் பதவுரையுடன் | பலபட்டடைச் சொக்கநாத பிள்ளை |
| 7707 | நவத்திரட்டு | டாக்டர் A. G. கோமதியம்மாள் L. M. P. |

| | | |
|---|---|---|
| 7708 | வள்ளலார் வகுத்த வழிகள் (குறிப்புரையுடன் கூடியது) | குறிப்புரை ஆசிரியர் வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார் |
| 7709 | திருஅருட்பா 7-ம் புத்தகம் முதல் திருமுறை அல்லது பெருநூல் பகுதி | ஆ. பாலகிருஷ்ணபிள்ளை B. A., M. L., |
| 7710 | திருவானைக்காப் புராணம் | பதிப்பாசிரியர் தி. ம. சொக்கலிங்க முதலியார் |
| 7711 | ஆலயங்களின் உட்பொருள் விளக்கம் (சமயக்கிண்டர் கார்டன்) முதற் புத்தகம் | A. சொக்கலிங்கம் இலஞ்சி |
| 7712 | திருப்புகழ் முதற் பாகம் | பதிப்பாசிரியர் கா. முருகேச முதலியார் |
| 7713 | பிரார்த்தனைகள் | மெய்கண்ட சித்தாந்த சபை குடந்தை |
| 7714 | அற்புதக்கனி | R. பஞ்சநாதம்பிள்ளை |
| 7715 | வீரபாண்டியம் (முதல் பாகம்) | கவிராஜ் பண்டிதர் செகவீரபாண்டியனுர் |
| 7716 | ஸ்ரீகாசி காண்டம் என வழங்கும் ஸ்ரீகாசி காண்டம் மூலம் | திருவாவடுதுறை யாதின வெளியீடு |
| 7717 | சிவபரத்துவ விளக்கம் | ஸ்ரீலஸ்ரீ சிவஅருண சிவயோகிகள் |
| 7718 | சமயாசாரியார் சந்தனுசாரியார் சரித்திர சங்கிரகம் - நால்வர் நான்மணி மாலை மூலமும் உரையும் - சந்தனு சாரியார் மாலையும் | திருமயிலை சே. வ. ஜம்புலிங்கம்பிள்ளை |
| 7719 | திருக்குறுங்குடி ஸ்ரீ பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் மடத்து வரலாறு | பதிப்பாசிரியர் ஸ்ரீ வே. வேங்கடராஜுலு ரெட்டி [யார் |
| 7720 | ஸ்ரீ ஜகத்குரு திவ்ய சரித்திரம் | ஸ்ரீ ஜகத்குரு பொன்விழா வெளியீடு |
| 7721 | குருந்தொகை மூலமும் உரையும் | ஸ்ரீ தியாகராச விலாச வெளியீடு மகா மகோ பாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் |
| 7722 | திருத்தொண்டர் புராணம் வம்பறுவரி வண்டுச் சுருக்கம் (ஐந்தாம் பகுதி) 2530–3154 உரையுடன் | சிவக் கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார், [B. A., உரை யாசிரியர். |

உ

## திருப்பனந்தாள் - ஸ்ரீ காசி மடம்

# 'திருமுறை வெளியீடுகள்'



| | | | ரூ. ந. பை |
|---|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை | ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் | ... | 6 00 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் | ... | 3 00 |
| 4 | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் ,, | ... | 2 25 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) ,, | ... | 1 30 |
| 7* | திருவாசகம் (புதிய பதிப்பு) ,, | ... | 0 50 |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) | ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பா திருப்பல்லாண்டு (மூலம்மட்டும்) | ... | 0 56 |
| 10* | திருமந்திரம் ,, (புதிய பதிப்பு) | ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை ,, | ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) | ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் | ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) | ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு | ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) | ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) | ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) | ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் – முதல் மூன்று காண்டங்கள் ,, | ... | 2 75 |
| 20 | ,, யுத்த தேவகாண்டம் ,, | ... | 2 00 |
| 21 | ,, தக்ஷகாண்டம் ,, | ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் | ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி | ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா – ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் | ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் | ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் – உரையும் | ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை – ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது | ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் | ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலம் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் | ... | 1 50 |
| 32 | திருக்குறள் – பொருட்பால் ,, | ... | 2 50 |
| 33 | திருக்குறள் – காமத்துப்பால் ,, | ... | 1 00 |
| | ௸ 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் | ... | 4 00 |

Registered With the Registrar of Newspapers for India
Under No R. No. 1485/57.
Regd No. M. 5574 

| | | | |
|---|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... | 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... | 0 13 |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... | 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... | 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனுட்சியம்மை குறம் | ... | 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... | 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... | 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் [அச்சில்] | | |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... | 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... | 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங்களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... | 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... | |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... | 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... | 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் | ... | 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் | ... | 1 20 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள், *"தியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோவில்தெரு, திருவேட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.*

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்.

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '60.